# முகவுரை.

சூரபன்மனின் வீரப்பிரதாபம் என்னும் பெயர் கொண்ட இந்நூல், கந்தபுராணத்தில், பெரும்பான்மை அசுர காண்டத்தைத் தழுவியும் சிறுபான்மை மகேந்திர காண்டம் யுத்த காண்டம் இவ் விரண்டைத் தழுவியும் எழுதியதாகும். இந்நூல், சூரபன்மனுடைய அரசியற்பெருமை, தவமகிமை, போரின் திறமை அவனுடைய மாயா விநோத லீலைகள் இவற்றையும் அவனை எதிர்த்து அமராடி யடக்கிய குமாரக் கடவுளுடைய திருவருட் பெருமையையும் விளக்குவதாதலின் இதனைப் பிள்ளைகள் படித்துணர்வார்களாயின் நல்ல விவேக மடைதல் கூடு மென்பது கருதி வெளியிடலானோம்.

இந்நூலிலுள்ள விஷயங்களும் இதன் வாசக ஒழுங்கும் உயர்தர வகுப்புப் பிள்ளைகளுக் கேற்றபடி அமைந்துள்ளனவாதலால், இந்நூலை உயர்தர வகுப்புப் பிள்ளைகளுக்கு உப பாடமாகக் கொள்வது பொருத்த முடையதாகும். இதன்கண் ஏதேனும் பிழைகள் காணப்படின் பெரியோர் அவற்றைப் பொறுத்தருள்வதுடன் எமக்கறிவிப்பார்களானால் வந்தனத்துடன் ஏற்று அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்வோம்.

உ

முருகவேள் துணை.

# சூரபன்மனின் வீரப்பிரதாபம்

## (ஸ்காந்தம் - அசுரகாண்டம்)

முன் ஒரு காலத்தில் சுரசை என்றோர் அரக்கி தோன்றினாள். அசுரகுருவாகிய சுக்கிராசாரி அவளுக்கு மாயையின் வித்தைகளையெல்லாம் உணர்த்தியருளினார்; அவளுடைய கல்வித்திறங் கண்டு அவளுக்கு மாயை என்று பெயரிட்டார். அந்த மாயை இலக்ஷ்மி தேவியும் வணங்கத்தக்க திருவுருவங் கொண்டு காசிபர் என்னும் முனிவரை நாயகனாக அடைந்து சூரபன்மன், சிங்கமுகன், தாரகாசுரன் என்னும் மூன்று அசுரர்களையும் அசமுகி என்னும் ஓர் அசுரப் பெண்ணையும் பெற்றாள். சிங்கமுகன் என்பவன் சிங்கமுகமும் தாரகாசுரன் என்பவன் யானை முகமும் அசமுகி என்பவள் ஆட்டுமுகமும் பெற்றிருந்தனர். இவர்களையன்றி சிங்கம், யாளி, புலி, குதிரை, மான், காடி, பன்றி முதலியவற்றின் முகங்கொண்ட அநேக அசுரர்களும் தோன்றினர்.

அசுரர்களுக்குத் தலைவர்களாகத் தோன்றிய சூரபன்மன், சிங்கமுகன் தாரகாசுரன் ஆகிய மூவரும் காசிபர், மாயை என்னும் தம் இருமுதுகுரவர்களையும் வணங்கி "நாங்கள் இனிச் செய்வதென்னை? உணர்த்

துங்கள்" என வேண்டினர். காசிபர், அவர்களை நோக்கி, "பிள்ளைகளே, தருமத்தைச் செய்யுங்கள். பாவத்திற்கஞ்சி அதனை விலக்குங்கள். வேண்டுதல் வேண்டாமையில்லாதவராகிய சிவபெருமானைத தியானித்துப் பெருந்தவமியற்றுங்கள். தவத்தையன்றிச் செய்யத்தக்கது ஒன்றுமில்லை. உடல் வருந்தத் தவம் புரிபவர் உலகம் வியக்கும்படி வாழ்வர்; தம்மை அடைந்தவரைக் காப்பர்; பகைவரை அழித்துப் பெருமை பெறுவர்; விரும்பும் எப்பொருள்களையும் அடைவர்; நித்தராய் விளங்குவர். தவம் புரியாமல் பிறவுயிர்களுக்குத் துன்பம் செய்யும் பாவிகள் இருமையின்பமும் அடையமாட்டார்கள். அவர்கள் மீண்டும் மீண்டும் பிறவித் துன்பத்தில் அழுந்துவர். தவமொன்றே இருமை யின்பத்துக்கும் ஏதுவாயிருப்பது. தவம் ஒப்புயர்வற்றது. அதற்கு ஒப்பு அதுதான். ஆகையினால் தவத்தைச் செய்யுங்கள். பாவத்தை விட்டுவிடுங்கள். தவவன்மையினால் குச்சகர் என்னும் ஒரு முனிவர், இறந்த ஒரு பெண்ணை எழுப்பினார். ஒரு யானையைத் தேவனாக்கி ஸ்வர்க்கபதத் திருத்தினார். அந்தக் குச்சகருடைய புதல்வராகிய மிருககண்டுயர் என்பவர் பிரமவிஷ்ணு முதலிய தேவர்களும் புகழத் தக்க அரிய பெருமையை யடைந்தார். அவருடைய புதல்வராகிய மிருகண்டு முனிவர் ஒப்புயர்வற்ற ஒரு சற்புத்திரனை அடைந்தார். அவர் புதல்வராகிய மார்க்கண்டேயர் என்பவர் விதியைக் கடந்து இயமனுடைய வன்மையை அகற்றி ஒரு காலும் இறப்பில்லாதவரானார். ஆதலால் சிவபெருமானை நோக்கித் தவம்புரியக் கடவீர்" என்று உபதேசித்தார்.

காசிபர் கூறிய இவ்வுபதேசத்தைக் கேட்ட மாயை நகைத்து, "ஐயா, இவ்வுபதேசம் முத்தி யடைய விருப்பமுடையவர்க்கே யல்லது இவர்களுக்கு இது கூடுமோ? செல்வமும், வெற்றியும் இன்பமும் அழிவற்ற ஆயுளும் புகழும் இவர்களுக்குப் பெருகவேண்டும்; இவைகளை அடைவதற்கேற்ற உபாயமே இவர்களுக்குத் தெரிவித்தருளல் வேண்டும்" என்றாள்.

காசிபர், "அப்படியா, இந்த உபதேசஞ்செய்ய என்னாலாகாது. நீயேசெய்" என்றார். மாயை தன் புதல்வர்களை யழைத்து, "உங்களுடைய தந்தை புகன்றது உண்மையேயாயினும் உங்களுக்கு அது ஏற்றதன்று. கல்விப்பொருள் செல்வப்பொருள் என்னும் இரண்டு பொருள்களுண்டு. அவை யிரண்டுமே அடையத்தக்கன. இவ்விரண்டனுள் ஒன்றை யடையாவிடினும் பிறவி பயனுடையதாகாது. அந்தப் பிறவியினும் பேய்ப் பிறவியே சிறந்தது. ஆயினும் இரண்டு பொருள்களுள் செல்வப்பொருளே சிறந்ததென்று கூறவேண்டும். சகல கலைகளையுமுணர்ந்த மேதாவியானாலும் அவன் வறிஞனாயிருப்பின் பெருமையடைய மாட்டான். கல்வியை அடைவதற்கும் செல்வம் இன்றியமையாததாகும். செல்வமே மேன்மையையும் புகழையும் கொடுக்கும்; தருமத்தையும் வளர்க்கும். செல்வத்தை யடையவேண்டுமானால் தளராத ஊக்கமுடையவரா யிருத்தல் வேண்டும். 'ஊக்கமுடைமை ஆக்கத்திற்கழகு' என்று கூறுவார்கள். செல்வம் பலவகைப்படும். அவையனைத்தையும் அடையநீங்கள் முயலுதல்வேண்டும். உங்களுக்குத் தேவர்

களே பகைவர்கள். தேவர்கள் தங்கள் விடாமுயற்சி யினாலே மேன்மையடைந்தார்கள். நீங்களும் அவ் வாறே மேன்மையடைதல் வேண்டும். ஆதலின் எவரும் செய்தற்கரிய ஒரு வேள்வி செய்யுங்கள். சிவபெருமானைத் துதியுங்கள். சிவபெருமான் உங்க ளுக்குக் காட்சிதந்து நீங்கள் விரும்பும் வரங்களை அளித்தருளுவர். அந்த வேள்வி செய்வதற்கு வேண் டிய பொருள்களை நான் தருகிறேன்" என்று கூறி அவ்வேள்வி செய்யும் விதத்தையும் அதற்குரிய மந்தி ரங்களையும் உபதேசித்தாள்.

இவ்வாறு உபதேசம் பெற்றதும் சூரபன்மன் மகிழ்ந்து தன் தம்பிமார்களுடன் தாயைப் பணிந்து விடைபெற்று வடபுலம் சென்று அங்கே ஆலவனத் தில் பதினாயிரம் யோசனைப் பரப்பை உள்வைத்து, அதனைச்சூழ மலைகளினாலே மதிலெழுப்பி நான்கு திக்குகளிலும் வாயில்கள் அமைத்து ஒரு வேள்விச் சாலை கட்டி முடித்தான்; அச்சாலையைச்சூழ அள வற்ற சேனைகளை அரணமாக நிறுவினான்; மந்திரத்தி னாலே வீரமடந்தையை வரவழைத்து நான்கு வாயில் களிலும் காவல்வைத்தான்; பூதங்களையும் பிசாசுகளை யும் காளிகளையும் மந்திரத்தினாலே வரவழைத்து மதிலுக்கு வெளிப்புறத்திலே காவல்வைத்தான்.

இத்தகைய யாகசாலையின் நடுவே அவ்வசுரன் ஆயிரம் யோசனை அகலமும் ஆயிரம் யோசனை ஆழமு முடைய ஓர் ஓமகுண்டம் செய்வித்தான்; அந்த ஓமகுண்டத்தைச்சூழ நூற்றெட்டு ஓமகுண்டங்க ளுண்டாக்கினான். அவற்றைச்சூழ ஆயிரத்தெட்டு ஓமகுண்டங்களைச் செய்வித்தான்.

இவ்வாறு யாககுண்டங்களை அமைத்தபின், சூரபன்மன் தன் தாயாராகிய மாயையை நினைந்தான். நினைதலும அவள் தோன்றி வேள்விக்கு வேண்டிய சகல பொருள்களையும் நிறைந்துச் சென்றாள். பின் சூரபன்மன் வேள்விசெய்யத் தொடங்கி நடுவேதியின் மத்தியிலே வச்சிரகம்பமொன்றை நாட்டினான்; நான்கு வாயில்களுககும் சென்று வீரமடந்தைக்கு மாமிசபலி கொடுத்தான். ஓம குண்டங்கள் தோறும் நச்சுவிறகிட்டுத் தீமூட்டி வேள்வி தொடங்கித் தாரகனை ஒரு பக்கமும் சிங்கமுகனை ஒரு பக்கமும் வைத்து உலவாது வேள்விசெய்யப் பணிததுத தான் நடுவேதியை அடைந்து சிவபெருமானைத தியானித்து விதிப்படி பூசித்து வேள்வி செய்வானாயினன்.

சூரபன்மன் இவ்வாறு வீரயாகம் செய்தலைக் கேள்வியுற்று பிரமாதி தேவர்கள் அஞ்சி நடுங்கிப் பெருந்துயருள் மூழ்கினர். இவ்வாறு பதினாயிரம் வருஷகாலம் சூரபன்மன் யாகம் செய்தான். செய்தும் சிவபெருமான் எழுந்தருளி வந்திலர். ஆகவே அவன் ஆகாயத்திலே சென்று அங்கே நின்று கொண்டு தன் உடற் சதையையெல்லாம் வாளினல் அரிந்தரிந்து ஓமாக்கினியில் சிந்தி இரத்தத்தை ஆகுதியாக அளித்தான். அவன் தன் தேக தசையை அரிய அரிய அது முன்போல் வளர்ந்தது. அவ்வாறு ஆயிரம் வருஷம் வேள்வி செய்தான். செய்தும் சிவபெருமான் எழுந்தருளி வந்திலர். சூரபன்மன் அதுகண்டு வெறுப்படைந்து மரணமடைய நிச்சயித்து அங்கே நாட்டியிருந்த வச்சிரத்தம்பத்தின்மீது குதித்து அத

னுச்சியிலிருந்து உருவினுற்போல் வந்து வேள்வித் தீயிலே பாய்ந்து சாம்பரானுன்.

இதைக்கண்ட சிங்கமுகனும் தாரகனும் பெருந் துயரமடைந்து நெடுநேரம் புலம்பியழுது, "நம் உயிர் போன்ற தமையனிறந்தபின் நாம் உயிருடனுலாவு வதோ?" என்றெண்ணித் தங்கள் தலையை வாளி ஞலே அறுத்து யாகாக்கினியிலிட்டார்கள். அறுக்க அறுக்கத் தலைகள் வளர்ந்துகொண்டே வந்தன. இவ்வாருகவே இருவரும் யாகாக்னியிலே விழுந்துயிர் விடத் தீர்மானித்து ஆகாயத்திலே எழுந்துபோக யத்தனித்தனர். இச்சமயத்தில் சிவபெருமான் ஒரு விருத்தப் பிராமணராக வேடங்கொண்டு அவர்கள் முன்னே தோன்றி நின்று ஒன்றுமறியாதவர்போல் அவர்கள் வரலாறு கேட்டுப் பின், "சோகப்பட வேண்டாம்: இதோ இன்னும் இமைப்பொழுதில் உங்கள் தமையன் உயிர்த்தெழுவான" என்று கூறி அங்கே தேவகங்கையை வரும்படி திருவுளஞ்செய் தார். செய்தவளவில் கங்கை பெருகிவந்து குண் டத்தினிடையே புகுந்தது. புகுந்ததும் சூரபன்மன் ஆர்த்தெழுந்தான். தங்கள் தமையனைக் கண்டதும் சிங்கமுகனும் தாரகனும் வறிஞர் பெருஞ்செல்வம் பெற்றதுபோல் மகிழ்ந்து விரைந்தோடி அண்ணன் திருவடி பணிந்தனர். அவுணர்களனைவரும் 'வாழிய' வெனத் துதித்து ஆரவாரித்தனர்.

இப்படியிருக்கையில், சிவபெருமான் பிராமண வேடத்தை மறைத்து உமாதேவியாரை இடதுபாகங் கொண்டவராய் இடபவாகனத்தின்மேல் காட்சி

தந்தருளினர். சிவபெருமானுடைய காட்சி கண்டதும் சூரபன்மனும் அவன் தம்பிமார்களும் பெருமகிழ்ச்சியடைந்து வெட்டுண்ட மரம்போல் உடல் முழுதும் நிலந்தோய வணங்கி யெழுந்து பலமுறை துதித்து நின்றனர்.

சிவபெருமான் சூரபன்மனைப் பார்த்து, "நெடுங்காலம் நம்மையெண்ணி வேள்வியியற்றி இளைத்தாய். நீ வேண்டும் வரம் யாது?" என்று கேட்டார். கேட்டதும் சூரபன்மன் சிவபெருமானைக் கரங்கூப்பி வணங்கி,—

"இந்தப் பிருதிவியிலுள்ள அண்டங்களெல்லாவற்றிற்கும் நான் அரசனாயிருத்தல் வேண்டும். அவைகளைப் பரிபாலிப்பதற்குரிய ஆக்ஞா சக்கரம் என்னிடம் இருத்தல்வேண்டும். எண்ணியமாத்திரத்தில் அண்டங்டோறும் போய் மீள்வதற்குரிய வாகனங்களையும் தந்தருளல் வேண்டும். என்றும் அழியாத உடம்பும் விஷ்ணு முதலிய தேவர்கள் வந்து எதிர்த்துப் போர்புரியினும் அவர்களை வெல்வதற்குரிய ஆண்மையும் பலவகையான படைக்கலங்களும் தந்துதவல் வேண்டும்" என்று கேட்டான்.

சிவபெருமான், "பிருதிவியிலுள்ள ஆயிரங்கோடி அண்டங்களுள் நீ ஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டுயுகம் ஆளக்கடவாய்" என்று வரமருள் செய்து அந்த அண்டப் பரப்பெங்கும்போய் வருவதற்கு இந்திரஞாலம் என்னும் தேரையும் அவ்வண்டங்களைப் பரிபாலித்தற்குரிய ஆக்ஞா சக்கரத்தையும் சிங்கவாகனத்தையும் கொடுத்தருளினர்; தேவர்களையும் அசுரர்களையும் ஏனையரையும் எளிதிலே வெல்லும்

வல்லமையும் பாசுபதப்படை முதலிய தெய்வப்படைகளும் எந்நாளும் அழியாதிருக்கிற வச்சிரயாக்கையையும் கொடுத்ததுமல்லாமல் பதினாயிரங்கோடி வெள்ளம் கச, ரத, துரக, பதாதியென்னும் நால்வகைச் சேனைகளையும் படைத்து உதவினார்.

இவ்வாறு சூரபன்மனுக்கு அருளியதும் அவனுடைய தம்பிமாரிருவரும் சிவபெருமானுடைய திருவடியில் வணங்கி நின்றனர். சிவபெருமான், "நீவிரிருவரும் உங்கள் தமையனுடைய இரண்டு தோள்களையும் போலிருந்து அவனுக்குத் துணைபுரிந்துகொண்டு நூற்றெட்டுயுகம் வாழக்கடவீர். தேவர்களெல்லோரும் உங்களுக்கு அடிமையாவர். உங்கள் மூவரையும் நம்முடைய சக்தி யொன்றே வெல்லும்" என்று வரமளித்து, அழியாத தேர்களையும் பாசுபதப்படையையும் கொடுத்து அவர்களை மகிழ்வித்து மறைந்தருளினார்.

இவ்வாறு வரங்களைப்பெற்ற சூரபன்மன் முதல் மூவரும் தங்கள் தந்தையாகிய காசிபரிடம் போனார். அவர், அவர்களுடைய நிலையை யுணர்ந்து "இனி இந்திரனுடைய வாழ்வுக்கு முடிவு வந்தது" என்றெண்ணி வருந்தி, அவர்களைச் சுக்ராசாரியாரிடம் போய் உபதேசம் பெறும்படி யனுப்பினார். அவர்கள் தந்தை கூறியவாறே சுக்ராசாரியாரிடம் போய்ப் பணிந்து நின்றனர். அவர், அவர்கள் நிலையை அறிந்து அவர்களுக்குத் தக்கவாறு உபதேசஞ்செய்யத் திருவுளங்கொண்டு கூறுகிறார்—

"பதியும் பசுவும் இரண்டல்ல; ஒன்றே. பாசம் உண்டென்பது பொய். சிவபெருமான் திருவிளை

யாட்டினால் இச்சை கொண்டு தமது மாயையினால் பூதங்களையும் பிறவற்றையும் உண்டாக்கி மாயையா லாகிய உடம்புகள்தோறும் தாம் குடத்தினுள்ளே ஆகாயம்போல் கலந்துநின்று அவ்வுடம்புகள் அழி யுங்காலத்தில் தாம் முன்போலிருப்பர். சிவபெருமான் எப்போதும் இவ்வாறே திருவிளையாடல் புரிவர். இரு வினைகளும் அவற்றின் பயனாகிய இன்பதுன்பங்களும் பொய். முத்தியென்று ஒன்றுண்டென்று கூறுவதும் அதனையடையப் பாடுபடவேண்டுமென்பதும் பொய் யாம். 'தருமம் நமக்குத் துணையாகும். அதனைச் செய்வது நன்று' என்று கருதிச் செய்வதும் 'பாவம் தீங்கைவிளைக்கும்; அதனைச் செய்வது கூடாது' என்று கருதி அஞ்சுவதும் அறியாமையாம். யாது யாது எவ்வெப்போது செம்பும்படி நேருகிறதோ அவ்வப்போது அதனை அதனை இது தீது இது நன்று என்று சிந்தைசெய்யாமல், அவையாவும் கடவு ளுடைய மாயையெனக் கருதிச் செய்தல் வேண்டும். இப்பிறப்பிலே செய்யும் புண்ணிய பாவங்கள் மறு பிறப்பிலே பயன்படுவதில்லை; மறுபிறப்பென்பதே கிடையாது. சிலரைச் சிறியர் என்றும் சிலரைப் பெரியர் என்றும் கருதுவது தகுதியன்று. உயிர்கள் யாவும் ஒன்றே என அறிதல்வேண்டும். பிரமா முதலிய தேவர்களை மேலோரென்று எண்ணாதே; அவர்களை வணங்காதே. தேவர்கள் உங்களுடைய பகைவர்களாகையினால் நீங்கள் அவர்களை எப்போதும் அடக்கியாளுங்கள். இந்திரன் என்கிற தேவராஜன் முன்னாளில் அநேக அவுணர்களை வதஞ்செய்திருக்கி றான். அவனை முதலில் அடக்குங்கள். முனிவர்களையும்

திக்குப்பாலகர்களேயும் தேவர்களேயும் எவல்கொள் ளுங்கள். சிவபெருமான் உங்களுக்கென்று அளித்த ஆயிரத்தெட்டு அண்டங்களேயும் இப்போதே போய்ப் பார்த்து அங்கங்கே உங்கள் அதிகாரஞ்செல்வதற் கான முயற்சிகளே விரைவில் செய்யுங்கள்" என்று உபதேசித்தருளினர்.

அப்பால் சூரபன்மன் தன் தம்பிமார்களுடன் சுக்கிராசாரியாரை வணங்கி விடைகொண்டு திக்விஜ யஞ் செய்யப் புறப்பட்டு, குபேரன் முதலிய அஷ்ட திக்குப்பாலர்களேயும் வென்றன். பின் பாற்கட லுக்கேகி மகாவிஷ்ணுவையும் எதிர்த்தான். அவர் சூரபன்மனுடைய வரமகிமையை யெண்ணி, அவ னேப் புகழ்ந்து ஆசிகூறி யனுப்பினர். அப்பால் அவன் ஸ்வர்க்கலோகம் போனன். அவன் வரவை ஒற்றர்களால் அறிந்த இந்திரன் அஞ்சித் தன் மனேவியோடு குயிலுருக்கொண்டு தன் உலகத்தை விட்டோடி ஒளிந்துகொண்டான். அதன்பின் சூர பன்மன் பிரமலோகம்போய் பிரமதேவரையும் எதிர்த் தான். பிரமதேவர் அவனுடைய வரபலத்தை யறிந்து அவனுக்கு ஆசிகூறி வேண்டிய உபசாரணேகளேச் செய் தனுப்பினர்.

இவ்வாறு யாவரையும் வெற்றிகொண்டபின் சூர பன்மன் தெய்வத் தச்சனேக்கொண்டு தென்சமுத்திரத் தில் எண்பதினுயிரம் யோசனே விரிவுடையதாக ஒரு நகரத்தை நிர்மாணித்துக்கொண்டான்; அதற்கு **வீரமகேந்திரபுரம்** என்று பெயரிட்டு அந்த நக ரத்தில் தனக்கென அமைத்த அற்புத மாளிகையில் அரியாசனத்தமர்ந்து பிரமா முதலிய தேவர்கள்

துதித்துப் புகழப் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டான்.

பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு சிங்காசனத் தமர்ந்தருளிய சூரன் மகாவிஷ்ணுவை அழைத்து, "நீ என் தந்தையாகிய காசிபருக்குப் பாட்டனாதலின், உன்னை நாம் அழைக்குந்தோறும் விரைந்து வருக" என்று ஆக்ஞையிட்டனுப்பினான்; பிரமதேவரைப்பார்த்து, "உன் புதல்வர்களோடு இங்கே வந்து நாடோறும் பஞ்சாங்கம் படித்துப் போகுக" என்று கட்டளையிட்டனுப்பினான்; சூரியனைப் பார்த்து, நமது நகர மதிலின் மேலாகப் போதல் உனக்கியலாது. ஆதலால் கீழ்மேல் திசைகளிலுள்ள கோபுரவாயிலின் வழியாகப் புகுந்து ஆகாயத்திலே போய் எந்நாளும் இளம் வெயில் வீசித் திரிதி" என்றும் சந்திரனைப் பார்த்து, "வளர்தல், தேய்தல், சுருங்குதல் ஆகிய இவற்றை விடுத்துப் பூரணகலையோடு சஞ்சரிக்குதி" என்றும் அக்கினியை நோக்கி, "நம்மவர் யாவர் நினைப்பினும் நீ அவரிடம் வந்து அவர் விரும்பும் பணிகளைச் செய்வதோடு யாவர் உன்னைத் தீண்டினும் சுடாமல் குளிர்ச்சி தந்திடுதி" என்றும் யமனை நோக்கி, உன் விருப்பப்படி நம்முடைய யானை குதிரைகளையும் அவுணர்களையும் கொல்வதை விட்டு விட்டு நம் ஆணைக்கடங்கித் திரிதி" என்றும் வாயுவை நோக்கி, "இந்நகரில் குவியும் குப்பைகளை அவ்வப்போது நீக்குதி" என்றும் வருணனைப் பார்த்து, "நாடோறும் வீதிகளிலெல்லாம் நீரைத் தெளித்துச் சுத்தமாய் வைத்திரு" என்றும் இந்திரனைப் பார்த்து, தேவர்களோடும் உன் பரிவாரங்களோடும் நாம் விரும்

பும்போது வந்து நம் பணிவிடைகளைச் செய்யக்கடவாய்" என்றும் இவ்வாறு யாவர்க்கும் கட்டளையிட்டனுப்பினான்.

அவ்வாறே யாவரும் அவனுக்கு ஏவல் புரிந்து வந்தனர். இந்த மகா உந்நத நிலையை யடைந்த சூரபன்மன் பதுமகோமளையென்னும் பெண்ணை மணந்து கொண்டான்; சிங்கமுகனுக்கு யமனுடைய மகள் விபுதையை மணஞ்செய்வித்தான்; தாரகனுக்கு நிருதியின் புதல்வியாகிய சவுரியை மணஞ்செய்வித்தான்: பின் தன் தமபிமார்களுக்கும் தனித்தனி நகரங்களை நிர்மாணித்துக்கொடுத்து அவர்களை அங்கே அனுப்பி வைத்து "உலகமுழுவதையும் ஆக்கவும் அழிக்கவும் காக்கவும் வல்ல தெய்வமே" இவன் என்று எவரும் வியந்து மயங்கும வண்ணம் ஆளுகை செய்து வந்தான்.

## அத்தியாயம் 2

சூரபன்மன் இவ்வாறு அரசுசெய்யுங் காலத்தில் தேவர்களும முனிவர்களும் அவனுடைய ஏவலின் படி, வீரமகேந்திரத்திலும சிங்கமுகனுடைய நகரமாகிய ஆசுரத்திலும தாரகனுடைய நகரமாகிய மாயாபுரத்திலும் சென்று அவர்கள் கட்டளைப்படி பணிகள் செய்து உழன்று வருந்துவாராயினர். ஒரு சமயம் சூரபன்மன் தேவேந்திரனை யழைத்து "நீயும் ஏனைய தேவர்களும் கடலிலுள்ள மீன்களை நாடோறும் வாரிக்கொணர்ந்து கொடுத்தல் வேண்டும்" என்று

ஆணையிட்டான். இந்திரன் மறுத்தறகஞ்சித் தம்பினத் தவரோடு நாடோறும் கடலுக்குப்போய் மீன்களை பிடித்துக்கொண்டுவந்து தந்து அசுரவேந்தனைத் திருப்தி செய்வித்தான். தேவர்கள் "ஐயோ பழியாகிய இத்தொழிலைச்செய்ய நம் தலைவிதி யிருந்ததே! பாவி யாகிய இந்த அசுரனால் நமக்கு இன்னும் வருந் தொழி லெதுவோ? இடர் எதுவோ?" என்றெண்ணி வருந்தினர்.

சூரபன்மன் இப்படித் தேவர்களை ஏவல்கொண்டு அரசுபுரிந்து வருகையில், **பதுமகோமளை** என்னும் பட்டத்துத் தேவியினிடம் ஒரு புதல்வன் பிறந்தான். அவன் தொட்டிலிலே படுத்துறங்கும் குழந்தையாயிருக்கும்பொழுதே சூரியனைச் சிறைசெய்தபடியால் அவனுக்குப் **பாநுகோபன்** என்று பெயர் ஏற்பட்டது. பாநுகோபன் அழகில் மன்மதனைப்போல் விளங்கினான். பாநுகோபனுக்குப் பிறகுச் சூரபன்மன் அக்கினிமுகன், இரணியன், வச்சிரவாகு என்னும் பிள்ளைகளையும் அடைந்தான். சிங்கமுகனுக்கு **விபுதை** என்னும் பட்டமகிஷியினிடம் **அதிசூரன்** என்று ஒரு குமாரன் பிறந்தான். தாரகனுக்குச் **சவுரி** என்னும் பட்டத்து மனைவியினிடம் அசுரேந்திரன் என்னும் பிள்ளை பிறந்தான்.

சூரபன்மனுக்கு அசமுகி என்று ஒரு தங்கை யுண்டல்லவா? அவள் பொல்லாதவள்; தரும சிந்தனை இல்லாதவள்; பல புருஷனையடையும் விருப்பமுடையவள்; தேவர்களுடைய மனைவிமார்களைத் தன் தமையன்மார்களுக்கு மனைவியாகச் சேர்ப்பவள் முனிவர்கள் செய்யும் வேள்விகளுக்கு இடையூறு

செய்யும் பாதகி. பல சொல்வானேன். பாவமே உருவானவள். தன் குலத்தார்களை இகழ்பவர்களை யெல்லாம் கொன்று தின்னும் கொடியவள்; இவள் துருவாச முனிவரைச் சேர்ந்து **வில்வலன் வாதாவி** என்னும் இரண்டு புதல்வர்களை யடைந்தாள். அவர்களிருவரும் மகா பலசாலிகளாக விளங்கினார்கள். அவர்களும் சூரபமன்மனோடு சேர்ந்துகொண்டு முனிவர்களையும் தேவர்களையும் வருத்தத் தலைப்பட்டனர்.

இவ்வாறு பக்க பலங்களை யடைந்த சூரபன்மன் நாடோறும் இந்திரஞாலத் தேரின்மீதேறி ஆயிரத்தெட்டண்டங்களிலும் சென்று தனியரசு செலுத்தி வந்தான். அவன் ஒருநாள் பாதலத்திலிருப்பான்; ஒருநாள் திசைகளிலேபோய் உலாவுவான்; ஒரு நாள் வைகுண்டத்திலிருப்பான்; ஒருநாள் ஸத்திய உலகத்திலிருப்பான். இப்படி நாடோறும் எண்ணிறந்த உலகந்தோறும் போய் மாலைக்காலத்திலே மீளுவான்.

இந்த வைபவத்திலே இறுமாப்பும் பெருமிதமு மடைந்த சூரபன்மன் இந்திரனைச் சிறைசெய்து அவன் மனைவியாகிய அயிராணியைக் கவரும்படி நினைத்தான். நினைத்தமாத்திரத்தில் தன் சேனைத்தலைவனை யழைத்து "நீ இந்தக்ஷணமே அமராபதி சென்று இந்திரனைக் கட்டிப் பிடித்துக்கொண்டுவந்து என்முன் விடக்கடவாய்" என்று கட்டளையிட்டனுப்பிப் பின், தன் கோயிலைக் காக்கின்ற அசுரப்பெண்களில் அநேகரை யழைத்து, "நீங்கள் அமராபதி சென்று இந்திரன்

மனைவியாகிய அயிராணியைப் பிடித்துக்கொண்டு வந்து தாக்கடவீர்" என ஆணையிட்டனுப்பினன்.

அவுணர்கள் இவ்வாறு தன் உலகத்திற்குப் புறப்பட்டு வருவதை ஒற்றர்களாலறிந்த இந்திரன், தன் மனைவியோடு தன் மாளிகையைவிட்டுப் புறப்பட்டு மாயையினுல விரைவில் பூலோகஞ் சென்றுன். அவனைப் பிடித்துவரும்பொருட்டுச் சென்ற அசுரர்கள் இந்திரனை அமராவதி முழுவதுந்தேடிக் காணுமல், தங்கள் தலைவன் தங்களுக்கு என்ன தண்டனை விதிப்பானே என்கிற பயத்துடன் மகேந்திரபுரி சென்று சூரபன்மனைக்கண்டு வணங்கி "இந்திரன் தன் மனைவியுடன் விண்ணுலகத்தைவிட்டு நீங்கிசென்றனன்" என்றனர். அதைக்கேட்டவுடன் அசுரேசன் கண்களிலே கனற்பொறி பறக்க வெகுண்டு அவர்களை வெறுத்தனுப்பி ஒற்றர்கள் பலரை அழைத்து, "நீங்கள் எங்கும் போய்த் தேடிப்பார்த்து இந்திரனும் இந்திராணியுமிருக்குமிடத்தை அறிந்துவாக் கடவீர்" என்று கட்டளையிட்டனுப்பினன். இந்திராணியைக் கவர்ந்து வரும்பொருட்டுச் சென்ற அரக்கிகளும் வீணே மீண்டுவந்து அசுரனுடைய கோபத்திற் காளாயினர்.

இந்திரனுக்கு இந்தத் துன்பம் நேரிடுவதற்கு முன்பே இந்திரனுடைய மைந்தன் ஜயந்தன் என்பவன் வைகுண்டத்திற்குச் சென்றிருந்தான். தன் தந்தைக்கு இப்படிப்பட்ட துன்பம் வந்தது அவனுக்குத் தெரிந்தது. அவன் உடனே புறப்பட்டுப் பொன்னுலகுக்கு வந்து இந்திரனில்லாமல் தேவர்கள் படும் துயரத்தைக்கண்டு மனங்கலங்கித் துன்பத்தி

லாழ்ந்து ஏங்கி இரங்கி ஒரு செயலுமின்றிப் பித்தனைப்போலானான்.

இச்சமயம் நாரதமுனிவர் ஜயந்தனைத் தெளிவிக்கக்கருதி அமராவதி சென்று அவனைக் கண்டார். நாரதமுனிவரைக் கண்டதும் ஜயந்தன் வணங்கி ஆசனமளித்துபசரித்து, அவாருகே நின்று, "என் தந்தையும் அன்னையும் சூரபன்மனுக்கஞ்சி ஓடி ஒளித்தனர். அவர்கள் எங்கே சென்றார்களென்பது தெரியவில்லை. இப்படிப்பட்ட தீமைவர நாங்கள் என்ன பாவம் செய்தோமோ தெரியவில்லை. ஸ்வாமி, மகா பாவிகளாகிய அசுரர்களால் எங்களுக்கு ஏற்பட்டிருக்கும் இந்த உபத்திரவம் என்றைக்கு நீங்கும்?" என்று கேட்டான்.

நாரதர், "ஜயந்தா, கலங்காதே; ஆசனத்திரு. கூறுகிறேன்" என்று அவனை இரத்தினாசனத்திலிருக்கச் செய்து, பின், "ஜயந்தா, ஒருவனுக்கு நன்மையும் தீமையும் அவன் முன்செய்த வினையினாலே உண்டாகின்றனவேயல்லாமல் பிறராலே வருவதில்லை. அமுதத்திற்குச் சுவையினையும நஞ்சிற்கு கைப்பையும யாரேனும் கொடுத்தாரா? கல்வி கேள்விகளிலே தேர்ந்த பெரியவர்கள், இன்பம் வந்தகாலத்தில் பெருமகிழ்வெய்தித் தம்மை மறந்து இறுமாந்து திரியார்; துன்பம் வந்தபொழுது அதற்காக அஞ்சித் துயரத்திலாழ்ந்து தயங்கார் இன்பம் வருதலும் துன்பம் வருதலும் இவ்வுடலுக்கு இயைந்தனவே என்று கருதி முன்வினையை ஆராய்வார். இன்றைக்கு வறிஞராயிருப்பவர் நாளைக்குச் செல்வவந்தவராவதும், இன்றைக்குச் செல்வவந்தராயிருப்பவர் நாளைக்கு

வறிஞராவதும் தாழ்ந்தவர் உயர்ந்தோராவதும் உயர்ந்தவர் தாழ்ந்தவராவதும் வாழ்வில் மாறிமாறி வருவனவாம். முன்னைவினைப்பயனே இதற்குக் காரணமென்றறியக்கடவாய். அல்லாமலும் செல்வமும் வறுமையும் இன்பமும் துன்பமும் என்றும் நிலைபெற்றிரா! சந்திரன் தேய்வதும் வளர்வதும்போல இவைகளும் உண்டாவதும அழிவதுமாயிருக்கும். ஆகையினால் இப்போது உங்களுக்குத் தாழ்வுண்டாயிருப்பதையும் அவுணர்களுக்கு உயர்வுண்டாயிருப்பதையும் எண்ணி வருந்தாதே. இவை நிலைபெற்று நில்லா. அவுணனுடைய அடாத செய்கைக்கஞ்சி இவ்வுலகத்தைவிட்டகன்று உன தந்தையும் உன் அன்னையும் இப்போது பூவுலகத்திலிருக்கின்றனர். ஜயந்தா, நீ பிறப்பதற்கு முன் கயமுகன் என்னும் அவுணன் உங்களை வருத்தி வந்தான் அவனிறக்கும்படி உன் தந்தை பெருமுயற்சி செய்தான். அதுபோல் இப்போதும இந்தச் சூரபன்மன் இறக்கும்படி உன் தந்தை முயல்வான். ஆதலின் வருந்தாதே. கொடியவனாகிய சூரனும விரைவில் இறப்பான் உங்களுடைய துயரமும தொலையும். கலங்காதே'' என்று தேறுதல் கூறிச்சென்றார்.

இவ்வாறு தேறுதலையடைந்த ஜயந்தன், தேவர்களுக்குத் தேறுதல் கூறி, அவர்களைச் சூரபன்மனுடைய ஏவல்கள் கேட்டு நடக்கும்படி திட்டப்படுத்திவிட்டுத் தானும் அவரிடம் அஞ்சியவனாய் விண்ணுலகத்திலிருந்து வந்தான்.

பூவுலகத்திற்குச் சென்ற இந்திரன் சீர்காழியையடைந்து இந்தத் திவ்யக்ஷேத்திரமே நாமிருந்து தவமியற்றுதற்குரியதெனத் தீர்மானித்து அங்கே தங்கி

ஞன்; அடைந்தவனுடைய துன்பத்தை நீக்கி ஆத ரிக்கவல்ல சிவபெருமானை ஆராதிக்கத் திருவுளங் கொண்டு அங்கே ஓர் அழகிய நந்தனவனத்தை யுண்டாக்கினான். அந்த நந்தனவனம் சிலநாட்களில் வளர்ந்து பூசனைக்கு வேண்டிய புஷ்பங்களைத் தந்தது.

இந்திரன் புத்திமானானமையினால் ஆபத்திலும் சம பத்திலும், ஈசுவர ஆராதனையே துணைபுரிவதென் றுணர்ந்து நாடோறும் அமமலர்களை அன்போடு கொய்தெடுத்துச் சிவபெருமானுடைய திருவடிகளை அருச்சித்துக்கொண்டு எப்போதும் அவரையே தியா னித்து வந்தான். அவன் மனைவியும் கணவனை அநு சரித்து ஈசுவரனையே தியானித்து வந்தாள்.

இவ்வாறிருக்கையில் சூரபன்மனுடைய ஒற்றா கள் அவனுடைய ஆக்ஞையால் இந்திரனை தேடுதலும் தேடத் தொடங்கிப் பூலோகத்திற்குள் வந்து தேடு வாராயினர். இதனையறிந்த இந்திரன் உடனே தன் மனைவியோடு மூங்கிலுருக்கொண்டு தவமியற்றலா னான். ஒற்றாகள் பூவுலகத்திலெங்குந் தேடி இந்தி ரனைக் காணாமல் களைத்துச் சென்றனர்.

அப்பால், அவுணனுடைய ஆணையினால் மேகம மழை பெய்யாதொழிந்தது. அதனால் இந்திரன் வைத்த நந்தனவனம் தீப்பட்டாற்போல் வாடியது. அதுகண்டு இந்திரன் "அந்தோ என்ன செய்வேன். எம்பெருமானுடைய ஆராதனைக்கு இப்படியும குறைவு ஏற்படுமோ? இஃதும் என்வினைசெயும கொடு மையா?" என்றெண்ணிக் கலங்கிச் சிவபெருமானை தியானித்து வருந்தினான். அச்சமயம், "இந்திர, நீ வைத்த நந்தனவனம் இப்போது வாடியிருந்தாலும்

அழியாது. கொஞ்சநாளில் இந்த ஸ்தலத்திலே ஓர் ஆறுண்டாம். அந்த ஆறு இந்த நந்தனவனத்தைச் செழிப்பிக்கும். நீ வருந்தாதே" என்று ஓர் அசரீரி வாக்குண்டாயது.

இதைக்கேட்டு இந்திரன் மகிழ்ந்து, "என்னை யாட்கொண்டருளும் பரமதயாபரனுகிய சிவபெருமானுடைய திருவருள் இது" எனத் தேர்ந்து மனக் கவலை யொழிந்து தவமபுரிந்து வந்தான்.

---

## அத்தியாயம் 3

இந்திரன் அசரீரி வாக்கைக்கேட்டுத் திடமுற்றிருக்கையில, உலகத்துயிர்களுக்கு இதஞ்செய்யும் கருணையுடையவரும் பின் நிகழ்வனவற்றை முன்னரே அறிந்து அவைகட்கேற்ப செய்யத்தக்கவைகளைச் செய்ய வல்லவருமாகிய நாரதர், பூலோகம் வந்து விந்தகிரியை அடைந்து, அதனை நோக்கிப் பல ஆசிகள் கூறினர்—கூறியவளவில் அம்மலை தெய்வவடிவங் கொண்டு முன்னேவந்து நின்று வணங்கி உபசரித்தது. நாரதர், "விந்தமே, மேருமலையானது தான் ஒரு சமயம சிவபெருமானுக்கு வில்லானதையும உமா தேவியார் தன் மரபிலேவநது அவதாரம் செய்ததையும் சூரியமண்டலம வரையில் வளர்ந்திருப்பதையும், "ஙகமுடி வுகாலம் வரையில் அழியாதிருந்து இநதப் பூவுலகமுழுவதையும் காப்பதையும் தான் ஆயிரம் கொடுமுடிகளுடன் விளங்குவதையும் சிவபெருமானெழுந்தருளியிருக்கும் கைலாசமானது தன்னிடத்தில் ஒரு பக்கமிருப்பதையும் எண்ணி இப்போது இற

மாப்படைந்திருக்கிறது. இதனை உனக்குக் கூறவே நாம் இவ்வமயம் இங்கே வந்தோம்" என்றார்.

இதனைக் கேட்டதும் விந்தகிரி நகைத்து, "ஸ்வாமி, பெண்கள் நாணத்தினால் தலை குனிந்து வணங்கி நிற்பதுபோல் வில்லாக வளைந்தது ஒரு பெருமையோ? உலகத்தையும் உலகத்துயிர்களையும் தாங்குவது சிவசக்தியாயிருக்க, இந்த மேரு தான் தாங்குவதாகப் பெருமை பேசிக்கொள்வதினும் வேறு பேதைமையுண்டோ? கல்லென்றிகழ்ந்தன்றோ சூர பன்மன் இதனைத் தாக்காமல் விட்டான். சிவபெரு மான் வீற்றிருந்தருளும் கைலாசமலைக்கு அருகிலில் லாதது எந்த மலை? இப்படியிருக்க மேருமலை தன்னை வியந்து தருக்கடைவதேனோ?" என்று மேருவை இழிவாய்ப்பேசி, "ஸ்வாமி, இதோ அதனுடைய இறுமாப்பை அடக்குகின்றேன்" என்று கூறி அவ ரைப் பணிந்து மறைந்தது. மறைந்தவளவில், அந்த மலை அகன்று ஆகாயத்திலுயர்ந்து ஸத்திய உலகம் வரை நிமிர்ந்தது. இதனைக் கண்டு நாரதர் வியந்த வாறே ஸத்தியலோகம் சென்றார்.

இவ்வாறு திடீரென்று விந்தமலை உயர்ந்த விந்தை யைக் கண்டவரெல்லாம், "என்னே விநோதமிது! அசுரர்கள் செய்யும் செயலோ இது? இல்லை பிரம விஷ்ணுக்களின் செயலோ என மயங்கி என்னமாயம்? என்ன மாயம் என வியந்து நின்றனர்.

இக்காலத்தில் அகத்தியர் மேருமலையின் சார லிலே சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்துகொண் டிருந்தனர். இவருடைய பெருமையை யுணர்ந்த

சூரியசந்திரர்களும் நக்ஷத்திரங்களும், இந்த மகா ஞலேதான் இந்தா விந்தமலே அடங்கும் என்று தேர்ந்து அவரைத் தியானித்தார்கள்.

அகத்தியர் திரிகாலமு முணரவல்ல ஞானியாகை யினுல் தம்மை அவர்கள் தியானிப்பதன் நோக்க மறிந்து, விந்தமலேயின் வலியை அடக்கி ஆகாய வழியை முன்போலாக்கத் திருவுளங்கொண்டு சிவ பெருமானைத் தியானித்தார்.

அகத்தியர் எப்பொழுதும் தம்மையே தியானஞ் செய்யும் பரம பக்தசிரோமணியாகையால், சிவபெரு மான் விருஷபவாகனத்தின்மேல் பூதகணங்கள் புடை சூழ அவர்களுக்குக் காட்சிதந்தருளினுர். அகத்தியர் சிவபெருமானைக் கண்டதும் அடியற்ற மரம்போல் பலமுறை விழுந்து பணிந்து நின்று துதித்துத் தம்மை மறந்து நின்ருர். சிவபெருமான், "முனிவ, நீ விரும்புவது யாது?" என்று வினவினுர். முனிவர், "என் ஆண்டவனே விந்தமலே மேருமலேயோடு மாறுபட்டு ஆகாயம் வரையில் வளர்ந்து சூரியசந்தி ராதியர் சஞ்சரிப்பதற்கில்லாமல் வழியை அடைத் தது. அதுபற்றி அவர்கள் வருந்துகிருர்கள். உல குயிர்களும் வருந்துகின்றன. அந்த விந்தமலேயை அடக்கும்படி அருள்செய்தல் வேண்டும்" என்று வேண்டினர்.

சிவபெருமான், "அன்ப, நீ புறப்பட்டுப்போய் விந்தமலேயை அடக்கக்கடவாய். அதனை அடக்க உனக்கு வன்மையையளித்தோம். நீ விந்தமலேயை அடக்கியபின் தெற்கேபோய் பொதியமலேயிலிரு" என்ருர். முனிவர், "ஸ்வாமி, நல்லது அவ்வாறே

செய்கிறேன். அங்கே தேவரீருடைய ஆராதனை செய்தற்கேற்றவாறு நீர்வளமிருந்திருக்கும்படி ஒரு தீர்த்தத்தைத் தந்தருளல் வேண்டும்" என்றார். சிவபெருமான் "அவ்வாறே தந்தருளுவோம். நீ போ" என்றருளிச்செய்து பூதகணங்களோடு மறைந்தார்.

அப்பால் அகத்தியர், மெருமலையிலிருந்து புறப்பட்டுத் தெற்கு நோக்கி வந்தார். வரும் வழியில் தாரகாசுரனுடைய நகரமாகிய மாயாபுரியைக் கண்டார். அந்த நகரத்தில் கிரவுஞ்சன் என்னும் அசுரனொருவனிருந்தான். அவன் மகா மாயாவி. வானுலகத்தை நிலவுலகமாக்குவான்; நிலவுலகத்தை வானுலகமாக்குவான். கடலை மலையாகவும் மலையைக் கடலாகவுஞ் செய்யவல்ல பேராற்றலுடையவன். இவையன்றி அவன் சூரியனைச் சந்திரனாக்குவான்; சந்திரனைச் சூரியனாக்குவான்; அணுவை மேருவாகச் செய்வான், மேருவை அணுவாக்குவான். இவ்வாறு அநேகவிதமான மாயைகள் செய்யவல்லவன். இவன் அகத்திய முனிவர் வருவதை அறிந்தான். அறிந்தவளவில், அகத்தியர் செல்லும் வழியை மறித்துக்கொண்டு ஒரு பெரிய மலையானான். அகத்தியர் அம்மலையைக் கண்டு வியந்து நோக்குகையில் அதில் ஊடுருவினாற்போல் ஒருவழி சென்றது. அகத்தியர் அந்த வழியில் நுழைந்து சென்றார். சிறிது தூரம் சென்றதும் அவ்வழி இல்லாமற்போய் வேறொரு வழி தென்பட்டது. முனிவர் அதன் வழியே சென்றார். அவ்வழியும் கொஞ்சதூரம் போனதும் இல்லாமற் போயிற்று. பின் அங்கே வேறொரு வழி தென்பட்டது. அவ்வழியே சென்ற

போது அஃதும் இல்லையாகவே முனிவர் எங்குச் செல்வதென்று தெரியாமல் சற்றுநேரம் மயங்கினாற் போல் நின்றார். பின் அங்கு ஒரு சிறு கொடி வழி தெரிந்தது. முனிவர் அவ்வழியே சென்றார். சிறிது தூரம் சென்றதும், தமக்கு முன்னே வழியை மறித்தது போல் அக்னிமூண்டெரிவதைக் கண்டார். கண்டதும் என்னை இது என மயங்கி நிற்கையில் பெருஞ்சுழல் காற்று வீசியது. உடனே பேரிருள் சூழ்ந்தது. பின் இடி மின்னல்களுடன் பெருமழை பெய்தது. பெய்ய அகத்தியர் அவ்விடத்தில் நின்று "இவ்வாறான தடைகள் உண்டாகக் காரணமென்ன ?" என்று ஆலோசித்துப் பார்த்தார். அவருடைய ஞானதிருஷ்டியில் இவையெல்லாம் அவுணனுடைய செய்கையென்பது கண்டுணர்ந்து உடனே கையோடு கைதட்டிச் சிரித்துப் பெருங்கோபங்கொண்டு "நல்லது ; இந்த அவுணனுடைய வன்மையை இன்றே ஒழிப்பேன்" என்று கூறித் தம் கைத்தண்டினால் அம்மலையிலே குற்றி, "மூட அசுரா, உன் வல்லமையை என்னிடமா காட்டுகின்றாய் ? நீ இனி உன் அசுர வடிவ மொழிந்து இங்கேயே மலைவடிவமா யிருக்கக்கடவாய் ! பின்னாளில் சிவகுமாரராகிய சுப்ரமண்யக் கடவுளின் வேலாயுதம் உன்னை அழிக்கும்" என்று சாபந்தந்து தம் கைக்கமண்டலத்திலிருந்த நீரை அள்ளித் தெளித்து அவன் வன்மையை அடக்கிப் பின் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு நெடுந்தூரம் நடந்துவந்து விந்தமலையை யடைந்தார்.

விந்தமலை ஆகாயமளாவி வளர்ந்து நிற்பதைக் கண்ட முனிவர் வியப்புற்று, "விந்தமே, நாம் எல்

லாம்வல்ல இறைவனாகிய சிவபெருமானுடைய ஆக்ஞைப்படி பொதியமலை செல்லுகின்றோம். நமக்கு வழியை விடக்கடவாய்'' என்றார்.

விந்தமலை, "சூரிய சந்திரரும் செல்வதற்கில்லாமல் வழியை அடைத்துக்கொண்டிருக்கும் நான் மிகக் குறிய வடிவையுடைய உனக்கஞ்சியா வழிவிடுவேன்? சை! திரும்பிவிடு வந்தவழியே!'' என்று கூறியது. அகத்தியர், உடனே சிவபெருமானைத் தியானித்துத் தமது கரத்தை அந்த மலையின் உச்சிவரையில் நீட்டி அங்கு அழுத்தினார். அழுத்தவே அது பூமியோடு பூமியாய்த் தாழ்ந்து பின் பாதலம் புகுந்தது. புகவே அம்மலை முனிவரை யழைத்து, "உமமுடைய பெருமையையும் வல்லமையையும் அறியாமல் அவமதித்துப் பேசிய என்னை மன்னிக்கவேண்டும். இனி எப்பொழுது நான் என் பழைய நிலையை அடைவேன். கிருபை செய்யவேண்டும்'' என்று வேண்டினன்.

அகத்தியர், "இப்பொழுது செல்லும் நான் திரும்ப மீள்வேனானால் அப்பொழுது நீ எழுவாய்'' என்று கூறி நாரத முனிவர்செய்த சூழ்ச்சியை உணர்ந்து தமக்குள் மகிழ்ந்து தமது கரத்தை முன்போற் செய்து கொண்டு பொதியமலைக்குச் செல்லக் கருதினார். இச்சமயம் தேவர்கள் மலர்மாரி பொழிந்து வாழ்த்தினார்கள். சூரிய சந்திரர்களும் வந்து வணங்கி வாழ்த்திச் சென்றனர். அப்பால் அகத்தியர் தென்றிசையை நோக்கிச்சென்றார்.

இவர் வரவை யறிந்த வில்வலன் வாதாவி என்பவர்கள் "இந்த முனிவனை எவ்வித உபாயத்தினாலாவது கொன்றுவிடவேண்டும். அவுணர்கள் பலருடைய

உயிரைக் கவர்ந்தவன் இவன். இவன் முன்னொரு சமயம் கடலைக்குடித்து உமிழ்ந்திருக்கிறான். இவன் தேவர்களுக்கு அநுகூலஞ் செய்வதன்பொருட்டுப் புறப்பட்டிருக்கிறான். இக்குள்ளனை நம்புவது கூடாது. இவன் பொல்லாதவன். இவனை உண்பதற் கழைத்துத் தந்திரத்தினாலே கொல்லவேண்டும்" என்று நிர்மா னித்துக்கொண்டனர். பின் வாதாவி என்பவன் ஆட்டுக்கடாவானான். வில்வலன் சடைமுடியும் மா வுரியும் கமண்டலமும் விபூதி ருத்ராக்ஷமும் தாங்கிய ஒரு முனிவனானான். அகத்தியர் தன் பக்கமாய் வந்த தும் அவரை வணங்கி வரவேற்று, "தங்கள் வரவை வெகுகாலமாக எதிர்பார்த்துக்கொண் டிருந்தேன். நல்லகாலம் இப்பொழுதுதான் வந்ததுபோலும். பாவியேன் எடுத்த பிறவியின் பயனை எய்தினேன். இதுதான் இந்த அடிமையின் இருக்கை. இங்கே எழுந்தருளவேண்டும்" என்று வேண்டினான். அகத் தியர் அவனுடைய கெட்ட எண்ணத்தை உணர்ந் தார். ஆயினும் அதனை எண்ணாமல் "இதோ வருகின் றேன்" என்று கூறி அவன் காட்டிய குடிசைக்குள் அவனோடு சென்றார். அங்கே சென்றதும் அவுணன், அகத்தியருக்கு ஆசனமளித்து இருக்க உபசரித்து "இன்று இங்கு அமுதுசெய்து அடியேனைப் புனித னாக்கவேண்டும்" என்று வேண்டினான்.

அகத்தியர், "நல்லது! உன் வேண்டுகோளின் படி இங்கே அமுதுசெய்து செல்வோம்" என, அவ் வவுணன், "சிறிதுபொழுது தாமதித்தல்வேண்டும். இதோ திருவமுது பாகம் பண்ணுகிறேன். விரை வில் முடிந்துவிடும்" என்று கூறிச்சென்று ஒரு கடா

கத்தில் நீராடி மகா பரிசுத்தனைப்போல் வீடுவந்து அரிசிச்சோறும் கறியுஞ் சமைத்துப் பின் ஆட்டுக்கடா வான தன் தம்பியை வெட்டிக் கொள்ளத்தகும் இறைச் சியை யெடுத்து நெய்விட்டுப் பொரியல் செய்து முடித்துப் பின் அகத்தியரை முறைப்படி போஜனஞ் செய்ய அழைத்து அவரை இலையின்முன் ஆசனத்தி லிருத்தி, தான் சமைத்தவைகளையெல்லாம் படைத்து உண்ணும்படி வேண்டினன். முனிவர் அந்த உணவை யுண்டெழுந்தார். அவுணன் அவருக்குக் கைகழுவ நீர் கொடுத்து உபசரித்துப் பின் ஆசனத்தில் அமர்ந் தருளும்படி வேண்ட, முனிவர் ஆசமனஞ்செய்து ஆசனத்தமர்ந்தார்.

அப்பால் வில்வலன் ஓரிடத்தமர்ந்து முனிவரின் உயிரைக் கவர்வதற்கெண்ணி, "வாதாவி! வாதாவி! ஓடிவா" என்றழைத்தான். வாதாவி முனிவரின் வயிற்றில் ஆட்டின் மாமிச உணவாகவல்லவா இருக் கிறன்? அவன் எப்படி வருவான்? வில்வலனுடைய மந்திரசக்தியினல் அவன் முனிவரின் வயிற்றில் ஆட்டுக்கடாவா யெழுந்து நின்று "அண்ணு, இதோ வருகிறேன். முன் கடலையுண்ட இக்குறிய முனிவ னுடைய உயிரும் வன்மையும் அழிய இவன் வயிற் றைக் கிழித்துக்கொண்டு வெளிப்படுகிறேன்" என்று கூறினன்.

இதைக்கேட்டதும் அகத்தியர் சினங்கொண்டு, "உயிர் நீங்கி உண்ணும் உணவான வாதாவி இந்த என் வயிற்றிலேயே ஜீரணமாய் அழிந்துபோகக் கட வன்" என்றுகூறித் தம் வயிற்றைத் தடவிக்கொண் டார். தடவிய அக்கணமே, வாதாவி அவர் வயிற்று

னுள்ளே ஜீரணமாய் அழிந்தான். அதுகண்ட வில் வலன் வெகுண்டு ஒரு தண்டத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அகத்தியரை அடிக்க ஓடிவந்தான். அப் போது அகத்தியர் தம் கையிலிருந்த தருப்பை யொன் றைப் படைக்கலமாகச் செய்து தாக்கும்படி யேவ அதுபோய் அவ்வவுணனைச் சாடி அவனைக் கொன் றது. அப்பால் முனிவர் அவ்விடம்விட்டுப் புறப் பட்டு கொங்கதேசம் போனார்.

அகத்தியர் கொங்கதேசம் போனபோது இறந்த வில்வலனும் வாதாவியும் பிரமகத்தியாய்ப்போய் மறைந்தும் சூழ்ந்தும் முன்னின்றும் ஆரவாரம் செய் தும் அவரைத் தொடர்ந்தார்கள். அகத்தியர், இவ் வாறு தம்மைத் தொடர்வது யாரெனச் சிந்திக்கை யில் இன்னாரென அறிந்து, இவ்வவுணர் இருவரும் துருவாசருடைய புதல்வர்களாகையினால் அவர்களைக் கொன்ற பிரமகத்தி தோஷம் நம்மை யண்டுகிறது என்று தெளிந்து அந்தத் தோஷம் நீங்க, பலநாள் சிவாராதனை செய்தார்.

இவ்வாறு அகத்தியர் கொங்கதேசம் வந்திருப் பதை யறிந்த நாரதர், பூலோகம்போய், சூரபன்மனுக் கஞ்சி மூங்கில் வடிவமாயிருந்து தவம்புரியும் இந்திர னைக்கண்டு, "இந்திர, நீ இனி வருந்தாதே. சிவபெரு மானுடைய திருவருளினால் நீ உன்னுடைய வாழ்வை விரைவில் அடைவாய். நீ செய்யும் சிவார்ச்சனைக்கு ஓர் ஊறுபாடுள்ளதென்று வருந்துகிறாய். அது நீங்குங்காலம் நெருங்கிவிட்டது. வருந்தாதே, அகத் திய முனிவர் மேருமலையிலிருந்து சிவபெருமானுடைய கட்டளையினால் பொதியமலைக்குச் செல்கிறார். வழி

யில் இப்போது கொங்கதேசத்திலே தங்கியிருக்கிறார். அவர் கைக்கமண்டலத்தில் காவேரி ஆறிருக்கிறது. அந்த ஆறு இங்கே பெருகும்படி செய்தால் உன் குறை தீரும்" என்று கூறினார்.

இந்திரன் "முனிவர் பெருமானே, அந்த நதியை எப்படி வரவழைப்பது?" என்று வினவினன். நாரதர், நீ விநாயகக்கடவுளை நினைத்து வந்தனை வழிபாடுகள் செய்வாயானால், அவர் எந்த உபாயத்தினாலாவது அந்த நதியைப் பெருகும்படி செய்வார். தவறாமல் விநாயகரை ஆராதிக்கக்கடவாய்" என்று கூறிச் சென்றார்.

அப்பால் இந்திரன் கவலை யொழிந்து விநாயகக் கடவுளின் திருவுருவத்தை ஸ்தாபித்து ஆராதனை செய்தான். விநாயகக்கடவுள் அவனுக்குப் பிரத்யக்ஷமாய் "இந்திர, நாம் உன் பூசனையேற்று மகிழ்ந்தோம். நீ விரும்பும் வரம் யாது?" என்று வினவினார். இந்திரன், "இறைவனே, சிவபெருமானுடைய ஆராதனைக்காக இங்கே ஒரு நந்தனவனம் வைத்தேன். அது தண்ணீரில்லாமல் வாடுகிறது. அது தழைத்தோங்குமாறு, அகத்தியருடைய கமண்டலத்திலிருக்கும் காவிரி நதியைப் பெருகும்படி செய்தருளல் வேண்டும்" என்று வேண்டினன். தம்மைச் சரணமடைந்தவர்தம் இடுக்கணீக்கி யாதரிக்கும் கிருபாநிதியாகிய விநாயகக்கடவுள், "அவ்வாறே யாகும்" என வரமளித்து மறைந்து அகத்தியரிருக்கும் கொங்கதேசம் போய், காக்கை யுருக்கொண்டு அவர் கமண்டலத்தினுட்கார்ந்தார். அதைக்கண்ட அகத்தியர், "என்னை இது! காகம் வந்து கமண்டலத்தில் உட்காருகிறது!

சை" என்றெண்ணி அதனை ஓட்டத் தம் கரத்தை உயர்த்தி ஓச்சினார். ஓச்சியதும் அக்காகம் அந்தக் கமண்டல நீரைக் கவிழ்த்துவிட்டு ஓடியது. கமண்டல நீர் மண்ணும் விண்ணும் நடுங்கப்பெரிய ஆரவாரத்துடன் பெருகியது. அப்பொழுது விநாயகக் கடவுள் காகவடிவம் நீங்கி, ஒரு பிராமண வடிவங் கொண்டு அகத்தியர் காண வெகு மெதுவாய்ச் சென்றார். அகத்தியர், "இவன் யாரோ அவுணன் என்பதில் ஐயமில்லை" என்று கருதிச் சினந்து, "இவனுடைய வல்லமையைப் பார்க்கிறேன்" என்றெழுந்து விநாயகக்கடவுளைப் பிடிப்பதெனத் தொடர்ந்தார். அவர், முனிவர்க்கு அஞ்சினவரைப் போல் ஓடினார். முனிவர் அவரைச் சிரசில் குட்டுவதற்காகக் கையை மடக்கிக்கொண்டு தொடர்ந்தோடினார். விநாயகர், முனிவரிடம் கிட்டுவதும் உடனே தூர ஓடுவதும் பின் விண்ணிலே குதித்தோடுவதும் ஆடுவதும் ஆர்ப்பதும் கைகொட்டுவதுமாக வளைந்து வளைந்து ஓடினார். அகத்தியரும் அவரை ஓடி ஓடித் துரத்தினார்; ஆனால் சிறிது நேரத்தில் களைத்துப்போனபடியால் நின்று "இவன் மகா மாயாவியாயிருக்கிறான்! இவனைப் பிடிப்பதற்கியலாது. இனி என்னசெய்வது" என்றெண்ணி அயர்ந்தார். அச்சமயம் விநாயகக்கடவுள் நமது நிஜரூபத்துடன் காட்சிதத்தருளினார். அகத்தியர் தரிசித்து, "ஆகா என் அறிவை என்னென்று கூறுவது! அகில லோக கர்த்தாவாகிய விநாயகக் கடவுளைத் துரத்தினேன்!" என்றெண்ணி மனம்நொந்து, தம் கரங்களால் தம்முடைய சிரசிலே குட்டிக்கொண்டார்.

இதுகண்ட விநாயகர், "ஏனிவ்வாறு செய்கிறாய்?" என, அகத்தியர், "என் ஆண்டவனே, தேவரீரை நான் ஒரு வஞ்சகப் பிராமணனென்று கருதிச் சினங்கொண்டு சிரசிலே குட்டிப் புடைப்பதற்காகச் சினங்கொண்டு தொடர்ந்தேன். அந்தக் கொடிய பாவத்துக்குப் பரிகாரமாக இவ்வாறு செய்துகொள்கிறேன்" என்றார். இதைக்கேட்டதும் விநாயகக் கடவுள் நகைத்து, "அதுபற்றிக் கவலைப்படாதே! நாம் உன்பால் உகந்தோம்" என்றுகூறித் தாம் காக உருக்கொண்டு கமண்டலத்தைக் கவிழ்த்ததன் காரணத்தையும் தெரிவித்து, அவர் விரும்பிய வரங்களையளித்து மறைந்தார். அப்பால் அகத்தியர் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுத் திருக்குற்றாலம் போய்ப் பின் பொதியமலையை அடைந்து சுகமாயிருந்தார்.

---

## அத்தியாயம் 4

இவ்வாறு காவேரி பெருகிச் சோழநாடு வந்து சீர்காழியிலே பாய்ந்ததும் தேவேந்திரனுடைய நந்தனவனம் செழித்து வளர்ந்து புஷ்பங்களை ஏராளமாக அளித்தது. தேவேந்திரன் நாடோறும் புஷ்பங்களை மனங்கொண்டமட்டு மெடுத்துச் சிவபெருமானை ஆராதித்துக்கொண்டு தன் குறைகள் நீங்குமாறு அவரைப் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனன்.

"கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்னும் முதுமொழிக்கிணங்க இந்திரன் தானும் தன் இனத்த

வரும் நல்வாழ்வை அடையும்வண்ணம் இவ்வாறு சிவபெருமானைப் பூசித்துக்கொண் டிருக்கையில், ஏனைய தேவர்களும் சயந்தனும் சூரபன்மன் செய்யும் சிறுமைக்கு ஆற்றாதவர்களாய் வருந்தினார்கள் ; நாளுக்குநாள் மெலிந்து புகலிடம் காணாமல் தவித்தார்கள் ; இப்படியும் ஒரு காலம் வருமா என்றெண்ணி ஏங்கினார்கள். ஆகா தவத்தின் வன்மையை என்னென்று கூறுவதென்று வியந்து பேசலானார்கள் ; நமக்கு என்று நல்லகாலம் வருமோ என்று நாளைக் கணக்கிட்டுக்கொண் டிருந்தார்கள். வாழ்வும் தாழ்வும் ஆறிடும் மேடும் மடுவும்போல் மாறிமாறி வருவன வாதலால் நல்லகாலம் நமக்கு வரும் என்று மனத் தேர்தலுடனிருந்தவர்களும் இச்சமயம் கலங்கிக் கருத்தழிந்தனர். ஜயந்தனும் நாரதர் கூறிய உறுதியை மறந்து தவித்தான். ஏனெனில் சூரபன்மனுடைய ஏவலால் அவுணர்கள் செய்யும் தொல்லைகள் அளவிறந்தனவாயிருந்தன. அன்றியும் அவனுடைய ஏவல் புரிவதில் சிறிது தவறினால் அதற்காக ஏற்படும் தண்டனையும் தாங்க முடியாததாயும் மானக்கேட்டை யுண்டாக்கக் கூடியதாயு மிருந்தபடியால் தேவர்களில் அநேகர் நினைத்த இடங்களுக்கு ஓடி ஒளிந்துகொள்வாராயினர். அநேகர் விண்ணுலகத்தைவிட்டு மண்ணுலகத்தே வந்து சீர்காழியை யடைந்து அங்கே தங்கள் தலைவனாகிய இந்திரனைக்கண்டு வணங்கிப் புலம்புகின்றார்கள்—

வேந்தே ! நியாய அநியாயமும் தருமா தருமமும் கவனியாமல் மனம்போனபடி யெல்லாம் அவுணர்கள் எங்களை வருத்தத் தலைப்பட்டுவிட்டனர்.

நாங்கள் படும்பாடு சொல்லும் தரமன்று. எங்களை அந்தப் பாவிகளிடம் ஒப்புவித்துவிட்டுத் தாம் இங்கிருப்பது நீதியாகுமா? எங்களையாளும் தலைவராகிய தமக்கு எங்களைப்பற்றிய நினைப்பிருக்கிறதா இல்லையா? நாங்கள் உங்களுக்குச் செய்த குறையென்ன? இங்குதானேதேனுமுண்டோ? அந்தோ என்ன சொல்வதிங்கே! தாரகனுகிய யானை, சிங்கமுகனுகிய சிங்கம் சூரபன்மனுகிய புலி இவர்கள்முன் நாங்கள் பசுக்களைப்போல் அகப்பட்டுக்கொண்டு தவிக்கிறோம். பிரபுவே, இப்படியும் எங்களைக் காட்டிக்கொடுக்கலாமா? நாடோறும் அந்தப் பாவி சூரபன்மனுக்கு அஞ்சி, செய்யாத ஏவல்களையெல்லாம் செய்தோம். பன்றி முதலிய விலங்குகளின் இறைச்சியையும் மீன்களையும் சுமந்துகொண்டு வந்து போட்டுக் களைத்துப் போனோம்; வலியிழந்தோம். மானத்தைத் துறந்தோம்; மதியும் மறைந்தது. கதியுங் கலங்கிக் கலங்குகிறோம்; விதியையெண்ணி மெலிகின்றோம்; தெய்வகோபமே சூரபன்மன் முதலிய அவுணராய்த் தோன்றி அலைக்கின்றதோ என்று அல்லல் அடைகின்றோம்; உய்யும் வழி கிடைக்குமோ கிடைக்காதோ என்று உள்ளமுடைகின்றோம். கயமுகாசுரனிடம் பட்ட துன்பம் போதாதா? அக்காலத்தில் நம்மைக் காப்பாற்றிய சிவபெருமான் இக்காலத்தில் நம்மீது இரக்கங்கொள்ளாததேன்? நாம் அந்தப் பரம்பொருளுக்குச் செய்த குற்றம் யாதோ? எங்கள் இறைவனே! இனி எங்களால் அந்த உபத்திரவத்தைத் தாங்கமுடியாது. தங்களையே புகலிடமாகக்கொண்டு வாழ்ந்த தங்கள் குடிக

ளாகிய எங்களைவிட்டு நீங்கித்தாம் இங்கிருப்பதுபெரும் வசையாகாதா? சூரபன்மன் முதலிய அவுணர்கள் மடியவும் அடியேங்கள் துன்பம் நீங்கி இன்பமடையவும் வரையில் ஏதேனும் ஒரு செயலைச்செய்யத் திருவுள மிரங்குங்கள்: தங்களையே தெய்வமென்று கருதும் எங்கட்குப் புகலிடமா யிருப்பவரன்றோ தாங்கள்?" என்று புலம்பினர்.

இந்திரன், நெடுநேரம் ஆலோசனையிலிருந்து அப்பால் தேவர்களை நோக்கி, "நான் என்னசொல்வேன் உங்களுக்கு, உங்களுடைய துயரம் என்னை வருத்துகிறது: சூரபன்மன், ஒருவரும் செய்தற்கரிய பெரியவேள்வியைச்செய்தானல்லவா? அப்பொழுதே நம்முடைய வாழ்வு நீங்கியதென்று நான் உங்களுக்கு உணர்த்தவில்லையா? நான் முன் கூறியபடியே நடந்ததன்றோ? சூரபன்மன் செய்த அரியதவங்கண்டு மகிழ்ந்து சிவபெருமான் அவனுக்கு எதிர்தோன்றிக் காட்சியளித்து அவன் விரும்பிய வரங்களைக் கொடுத்துச் சென்றார். அந்த வரபலத்தினால் அவன் நம்மை இப்பொழுது அடக்கியாள்கிறான்; தனக்கும் தன் இனத்தார்க்கும் குற்றேவல்புரியும்படி நம்மைவாட்டுகிறான்; மீன்பிடித்தலைப்போன்ற இழி தொழில் ஒன்றுண்டோ? அந்த இழிதொழிலையும் நாம் செய்தோமன்றோ? அவ்வாறிருந்தும் அந்தக் கொடியபாதகன், அயிராணியைப்பிடித்துத் தன் வசமாக்கிக்கொள்வதற்கும் என்னைப் பிடித்துச் சிறைசெய்வதற்கும் பெரும்படைகளை அமராவதிக்கு அனுப்பினானல்லவா? அதனாலன்றோ நாங்கள் அவ்வுலகையேவிட்டு நீங்கி இவ்வுலகம்போந்து கரந்துறையவேண்டியதாயிற்று. "தேவர்களுடைய வேந்த

னாகிய இந்திரன் ஓர் அவுணனுக்கடிமையாய், மீனும் கள்ளும் சுமந்தான் என்னும் பழிப்பிற்காளானதுமன்றி அவன் தன்மனைவியையும் அக்கொடியவனிடம் ஒப்படைத்துத் தானும் அவனிடம் சிறைப்பட்டிருக்கிறான். இதனினும் இழிவுண்டோ ஒரு வேந்தனுக்கு ?" என உலகம் பழிப்பதற்கும் ஆளாயிருந்தால் மானமுழுதும் அழியவருமே! அன்றியும் நான் படுபாவியாகிய அவுணனிடம் சிறைப்பட்டிருந்தால், அவுணர்களை ஒழிக்கவும் நாம் உய்வதற்குரிய வழியைத் தேடவும் எவ்வாறியலும் ? சூரபன்மன் நம்மை அடக்கியாளும் வன்மைபெற்றது தவத்தினாலல்லவா ? அந்தத் தவத்தினாலேயே நாமும் அவனை அடக்க வேண்டுமேயன்றி வேறு எந்த உபாயத்தினாலும் அவனை அடக்க முடியாது. தவம் சகல சித்திகளுமளிக்கும் ; தவத்திற்கே சிவபெருமான் இரங்கியருளுவர். ஆகையினாலேதான் நான் இவையனைத்தையும் ஆலோசித்துக்கொண்டு உங்களைவிட்டுப்பிரிந்து இவ்வுலகம்வந்தேன். இங்கே நான் சிவபெருமானை நோக்கித் தவம்புரிகிறேன். இனி நாம் ஒன்று செய்வோம். நாமெல்லோரும் ஒருங்கே சென்று கைலாசமலையையடைந்து சிவபெருமானைக் கண்டுவணங்கி நம்முடைய குறைகளை எடுத்துரைத்து அவருடைய திருவருள்பெற்றுய்வோம்" என்றான்.

இவ்வாறு இந்திரன் இயம்புதலும் தேவர்கள் பெருமகிழ்ச்சியடைந்து " இனி நாம் உய்ந்தோம் " என்றுரைத்துக் கார்கண்ட மயிலைப்போல் ஆடித் தங்கள் இறைவனைப் பணிந்து, " எங்கள் இறைவனே, எங்களுடைய அன்னையும் தந்தையும் ஆசானும் அரசனும் நீரே! எங்கள் செல்வமும் வாழ்வும் நீரே ! எங்கள் தவ

மும் புண்யமும் புத்தியும் இன்பமும் துன்பமும் யாவும் நீரே ! நீர் இப்பொழுது திருவாய் மலர்ந்தருளிய தேருதல் கேட்டதும் நாங்கள் வாழ்வைப்பெற்றவர்களானோம்; உம்முடைய குற்றேவல்கேட்டு நடக்கவேண்டிய நாங்கள், அந்தப்பாவியின் குற்றேவல் கேட்டு நடப்பதா? உம்முடைய ஆற்றலுக்கு முன் அவன் எம்மாத்திரம் ? முன் எங்களை வருத்திய அவுணர்களையெல்லாம் நீர் வதைத்து எங்களைக் காப்பாற்ற வில்லையா ? நீர் ஆலோசித்தபடி விரைவில் நாம் திருக்கைலாசம் போவோம். சிவபெருமானையன்றி இந்தக் கொடிய ஆபத்தை நீக்கி நம்மைக்காப்பாற்றுபவர் எவருமில்லை " என்றனர். தேவர்கள் கூறிய இவ்வுரை கேட்டதும் இந்திரன் மகிழ்ச்சியடைந்து, "அவ்வாறே செய்வோம் " என்று கூறி ஒரு சூழ்ச்சியைத் தன் மனத்திலெண்ணி உடனே தன்மனைவி இந்திராணியிருக்குமிடம் போய், அவ்வம்மையை அழைத்து, "சூரபன்மன் செய்யும் துன்பங்களைப் பொறுக்கமுடியாத தேவர்களிற் பலர் இங்கே வந்து புலம்புகிறார்கள். அவர்களுடைய துயரமும் நம்முடைய துயரமும் தீரவேண்டுமானால் நாம் சிவபெருமானைச்சரணமடைந்தாலல்லது வேறு வழியின்று. ஆதலின் நாங்கள் எல்லோரும் சேர்ந்து புறப்பட்டுக் கைலாசமலைக்கேகி, அடைந்தவர் இடுக்கண் களைந்து ஆதரிக்கும் கருணாகரனாகிய சிவபெருமானைக்கண்டு வணங்கி, குறைகளை விண்ணப்பஞ்செய்து கொள்வதென்று தீர்மானித்துள்ளோம். ஆதலின் நான் புறப்பட வேண்டும். போய் வர விடை தா " என்று கேட்டான்.

பகவான் இவ்வாறு கூறவே இந்திராணி, நாதனை

விட்டுப்பிரிந்திங்கே எவ்வாறு இருப்பதென்கிற அச்சமேலிட்டு, அம்பினால் அடிபட்ட ஓர் அழகிய மயிலைப்போல் அவன் முன்னே மயங்கி விழுந்து அறிவினை இழந்து அவசமானாள். இந்திரன், "மாதே அஞ்சாதே," எனக்கூறி இருகரங்கொண்டவளைத் தெடுத்துத் தன் துடையின்மேல் உட்காரவைத்துக் கொண்டு தேறுதல்கள் பலகூறித் தேற்றினான். தேற்றியதும் இந்திராணி கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகத் தன் கணவனை நோக்கி, "நாதா இந்த ஏழை என்ன செய்வேன்!" என்று கூறி மீண்டும் சோர்வடைந்து அவன் தோள்மீது சாய்ந்தெழுந்து பின், "என் உயிரே!" எனவிளித்து, "நான் ஸ்வர்க்கலோகத்தை விட்டுப்பிரிந்து இந்தப்பூவுலகத்திலிருந்தாலும் உம்மோடு கூடவிருப்பதால் அந்தத் துன்பம் என்னை வருத்தவில்லை. என்னை நீர் பிரிந்தேகுவீரானால் இந்தக் கானகத்தில் எனக்கு யார் துணையாவார்? உம்மைப் பிரிந்தபின் என் உயிர் என்னுடலிலேதங்கி நிற்குமா! சக்கரவாகம் என்கிற பறவைக்குச் சந்திரன் துணையாகிறான். வானம்பாடிக்கு மேகம் துணையாகிறது. அவ்வாறே நீர் எனக்குத் துணையாயிருந்து என் சோகத்தைத் தீர்த்து வருகிறீர்; அப்படியாவர் துணைபுரிவார் இங்கே? அன்றியும் இக் கானகத்தில் நான் தனியள்; இந்தக்காலமோ நீதியை ஒரு சிறிதும் எண்ணிப்பாராத் அவுணர்களின் கொடுங்கோன்மை ஓங்கி நிற்கும் காலம். இந்தக் காலத்தில் தாம் என்னைவிட்டுப் பிரிவது தகுமா? புலியும் சிங்கமும் நிறைந்திருக்கும் கானகத்திலே தன் இனத்தை விட்டுப் பிரிந்த ஒரு மானைப்போல் நானும் இங்கே

அச்சத்துடனும் நடுக்கத்துடனும் காலத்தைக் கழிக்க வேண்டும். ஒருகணமும் உமையைவிட்டுப் பிரிந்தறியாத நான் அவ்வாறு இங்கே வாழ்வதியலுமா? என்னாண்டவனே, நாம் சூரனுக்கஞ்சி நம்முடைய பெருவாழ்வைவிட்டு இங்கே வந்து வாழ்வது எதற்காக? பழிக் கஞ்சியேயன்றோ? மாபாவிகளான அவுணர்கள் பழிக்கஞ்சாத பாவிகளாயிற்றே! என்னை இங்கே கண்டுவிட்டால் சும்மா விட்டுவிடுவார்களா? அந்தோ! உமது மைந்தன் சயந்தனும் இங்கில்லை. ஐராவதமும் இல்லை. தோழிப்பெண்களுள் ஒருவரேனும் என்னிடமில்லை. இச்சமயத்தில் அவுணர்கள் வந்து இங்கு என்னைப் பிடித்து அடாதகாரியம் செய்வார்களேயானால் அந்தப்பழி யாரைச் சேரும்? என்னை ஆதரிக்கத் தோன்றிய பிரபுவே, நான் தனியே இவணிருப்பதற்காகாது. நானும் உம்முடன் கூட கைலாசமலைக்கு வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டாள்.

இந்திராணி இங்ஙனம் கூறக்கேட்டதும் இந்திரன் சற்றுநேரம் மலைத்து நின்று, பின் அவ்வம்மையை நோக்கி, "அயிராணி, வருத்தப்படாதே! நான் உன்னைத் தனியே விட்டுப் பிரியமாட்டேன். தக்க துணையின்றித் தனியே இருப்பதுதானே உனக்குக் கஷ்டம்? அஃதுண்மைதான். 'நான் திருக்கைலாயம் போய்த் திரும்புமளவும் காத்துவரவேண்டும்' என்று ஐயனாரை வேண்டிக்கொண்டு அவரிடம் உன்னை அடைக்கலமாக ஒப்புவித்துச் செல்கிறேன். அவருடைய காவலைமீற யாராலும் இயலாது. அவுணர்களுடைய மாயம் வீரம் ஒன்றும் அந்தப் பிரபுவினிடம் பலியாது. அவர் நினைத்ததை நினைத்தமாத்திரத்தில்

முடிக்க வல்லவர். அவருக்கு எல்லாம் அடங்கி ஏவல் புரியும். அவரை நீ தியானஞ்செய்து கொண்டிரு. உனக்கு இங்கே ஒருகுறைவு முண்டாகாது" என்று கூறித் தேற்றினன். இந்திராணி, "ஐயனுருடைய வரலாறு என்ன?" என்று கேட்டாள்.

இந்திரன், "அயிராணி! கேள். முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து அமிர்தமடையும்பொருட்டுப் பாற்கடலைக் கடைந்தார்கள். அப்போது அக்கடலிலிருந்து ஆலகாலவிஷம் எழுந்தது. அதுகண்டஞ்சிய தேவர்கள் சிவபெருமானைச் சரணடைந்தனர். சிவபெருமான் அந்த விஷத்தை உண்டு அவர்களைக் காப்பாற்றினர். பின் தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக் கடைந்தனர். அமிர்தம் எழுந்தது. அப்பொழுது தேவர்களும் அசுரர்களும், தனித்தனியே எங்கள் முயற்சியினலேயே இது கிடைத்தது; ஆகையினல் இது எங்களுக்கே உரியது" என்று அந்த அமிர்தத்தை அடையவிரும்பித் தமக்குள் மாறுபட்டுப் போர் புரியத் தொடங்கினர்கள். இவர்களுடைய பிணக்கை ஓர் உபாயத்தினலே நீக்கத் திருவுளங்கொண்ட மகாவிஷ்ணு மோகினியென்னும் ஓர் அழகிய பெண் வடிவங்கொண்டார். அந்தப் பெண்ணைக் கண்டு அவுணர்கள் மயங்கி அமுதத்திடங்கொண்டிருந்த அவா வொழிந்தனர். தேவர்களும் அவ்வாறேயாயினர். ஆகவே மகாவிஷ்ணு "உங்களுடைய சண்டையை விட்டுவிடுங்கள். இதோ இங்கே நானிருக்கிறேன்! அமிர்தமு முள்ளது. இவ்விரண்டனுள் நீர் விரும்புவதைக் கைக்கொள்ளுங்கள்" என்ருர்.

தேவர்கள் அமிர்தத்தைக் கைக்கொண்டனர்.

அவுணர்கள் மோகினியைக் கைக்கொண்டனர். மகாவிஷ்ணு மகா மாயாவியாதலால் அவுணர்களுக்குள் கலகம் விளைவித்து அவர்களிடமிருந்து மறைந்து வேறொருபக்கம் சென்றனர். அங்கே சிவபெருமான் ஓர் அழகிய ஆடவனாகி நின்றனர். இருவரும் சந்திக்கவே, அந்தவேளையில் அவ்விருவருடைய அம்சமாக ஐயனார் தோன்றினார். ஐயனாருக்கு ஹரிஹர புத்திரனென்றொரு பெயருண்டு. சாஸ்தா என்றும் ஒரு பெயருண்டு. அவர் ருத்திரர்களுக்குள் ஒருவராக விளங்குகிறார்; ஒரு புவனத்துக்குத் தலைவராயிருக்கின்றார். அவருக்கு அனேக பூதகணங்களுண்டு. அவர் ஒப்புயர்வற்ற வல்லமை படைத்தவர். அந்தப் பரமபுருஷர் உன்னைக் காப்பாற்றுவார். நீ அஞ்ச வேண்டுவதின்று" என்றான்.

அப்பால், அயிராணி, "நாதா உமது கட்டளைப்படி நான் இங்கேயே இருக்கிறேன். ஹரிஹர புத்திரர் எனக்குத் துணை செய்யட்டும். தேவர்கள் நம்மை நம்பிய குடிகள். ஆதலின் அவர்களுடைய துன்பங்களை நீக்குவது நம்முடைய கடமையாகுமாதலால் நான் அந்தக் காரியத்திற்குத் தடையாயிருப்பது தகுதியன்று. போய்வரலாம்" என்றாள்.

தேவேந்திரன் உடனே ஐயனாரைச்சிந்தித்தான். சிந்தித்தவளவில்அவர் வெள்ளையானையின்மேல் பூரணை புஷ்கலையென்னும் தமது மனைவிமார் சமேதராய் பூதகணங்கள் சூழ இந்திரன் முன்னேதோன்றி " இந்திர, என்னை வேண்டியதன் நோக்கமென்ன ?" என்று கேட்டார்.

இந்திரன் அவருடைய திருவடிமலர் பணிந்

தெழுந்து, "எம்பெருமானே, சூரபன்மன் என்னும் பாவி செய்யும் துன்பம் பொறுக்கமுடியாமல் நானும் என் மனைவியும் இவ்வுலகம் வந்து சீர்காழியென் னும் இந்தத் தலத்தில் மூங்கிலுருவத்துடனிருந்து சிவபெருமானை நோக்கித் தவம்புரிந்து வந்தோம். என்னுடைய ஆணைக்குட்பட்ட தேவர்களெல்லா ரும் அவுணர்கள் செய்யும் இடர் பொறுக்கமுடியா மல் இங்கே ஓடிவந்து என்னிடம் தங்கள் குறை கூறி, "எங்கள் இறைவனே, எங்களைப் பாதுகாக்க வேண்டியது எங்களையாளும் வேந்தாகிய தங்க ளுடைய பொறுப்பென்பதை மறந்தனேனோ? நாங் கள் யாரிடம்போய் எங்கள் குறைகளை நீக்கிக்கொள் வோம்?" என்று புலம்பினார்கள். அதன்மேல் நாங் கள் யாவரும் சிவபெருமான் திருக்கோயில்கொண் டெழுந்தருளியுள்ள கைலாசமலை சென்று அவரை வணங்கிக் குறைகளைக் கூறி அவை நீங்க வழி தேடுவ தெனத் தீர்மானித்தோம். இம்மைப் பயனையும் அம் மைப்பயனையும் அளிக்கவல்ல, பரமகிருபாநிதியாகிய சிவபெருமானையன்றி வேறு யாவர் எங்கள் குறைகளை நீக்கி எங்களுக்கு எங்கள் வாழ்வைக் கொடுக்கவல்ல வர்? ஒருவருமில்லையன்றோ? ஆதலின் அவரிடம் புகலடையத் தீர்மானித்தோம். நாங்கள் அங்கே போய் வருகிறவரையில் அயிராணியைத் தேவரீரே காத்தருளல் வேண்டும். இவள் இங்கே தனிமையா யிருக்க அஞ்சுகிறாள். அவுணர்களில் எவர்காணினும் இவளைத் துன்பத்திற்குள்ளாக்குவார்கள். ஆதலின், இவளை உம்மிடம் அடைக்கலமாக வைத்தேன்" என்றான்.

ஐயனார், "இந்திர, நீ சுகமே கைலாயமலைக்குப் போய் வா. உன் மனைவிக்கு ஒரு தீங்கும் நேரிடாமல் நாம் பார்த்துக்கொள்கிறோம். கவலைப்படவேண்டாம்" என்றருளிச்செய்து ஒரு பக்கம்போய் நின்று, மகாகாளர் என்பவரை யழைத்து, "இந்திரன் திருக்கைலாசமலைக்குச் செல்கிறான். அவனுடைய மனைவி இந்திராணி இங்கே இருக்கப் போகின்றாள். அவளுக்குச் சூரபன்மன் முதலிய அவுணர்களாலே ஒரு துன்பமும் நேரிடாவாறு நீ காத்துவரக் கடவாய்" எனக் கட்டளையிட்டுச் சென்றார்.

---

## அத்தியாயம் 5

அப்பால் இந்திரன் அயிராணிக்கு வேண்டிய தேறுதலைக்கூறி விடைகொண்டு தேவர்களுடன் புறப்பட்டுத் திருக்கைலாசமலைக்குப் போனான்; அங்கே, மங்கை பங்காளனுடைய திருக்கோயிலின் தலைவாயிலில் விளங்குபவராகிய நந்திதேவரை வணங்கித் துதித்தான். நந்திதேவர் "நீ இவண் வந்ததென்னை?" என்று கேட்டார்.

இந்திரன், "தான் வந்த சமாசாரத்தை எடுத்துக் கூறினான். நந்திதேவர், "இப்பொழுது நீங்கள் சிவபெருமானுடைய ஸந்நிதியை அடைய முடியாது. சிவபெருமான் ஸநகாதி நால்வருக்கும் ஞானத்தை உபதேசித்துக்கொண்டிருக்கிறார்" என்றார்.

இதைக் கேட்டதும் இந்திரன், இறங்கிய விஷம் மீண்டும் தலைக்கேறியபோதடையும் துயரமடைந்து

மலைத்து நின்றான். தேவர்களெல்லாம் வெள்ளத்தில் தோணியோடு கடலிலே ஆழ்ந்தவர்களைப்போல் துயருற்றார்கள். திருநந்திதேவர், "துயருறவேண்டாம். இறைவன் விரைவிலே திருவருள் புரிவார்" என, இந்திரன், "என் ஆண்டவனே, சூரபன்மன் ஒருவராலும் செய்தற்கரிய தவம்புரிந்தானாகையினால் சிவபெருமான் அவனிடம் கருணைகூர்ந்து நீண்டகால ஆயுளையும் அளப்பரும் செல்வத்தையும் எவராலும் வெல்லுதற்கரிய வன்மையையும் அவனுக்குக் கொடுத்தருளிச் சென்றார். அந்த வரபலத்தினால் அவன் இறுமாப்படைந்து நன்மை தீமைகளையும் பாவபுண்ணியங்களையும் கருதாமல் தன் மனம்போன போக்கிலேயே நடந்து எங்களையும் முனிவர்களையும் பொறுத்தற்கரிய துன்பத்திற்குள்ளாக்கி இழிவுபடுத்துகிறான். மீன் சுமந்தலாகிய இழிதொழிலையும் புரிந்து மனமுடைந்து வாடினோம். என்ன செய்வோம்? அந்தப் பாவிசெய்யும் துன்பங்களைத் தெரிவித்துக்கொள்ள வந்தோம். எங்களுக்கு இன்னும் நல்லகாலம் வரவில்லைபோலிருக்கிறது. எங்களிடம் கருணைகூர்ந்து சிவபெருமான் சூரபன்மனை அவன் செல்வத்தோடு அழிப்பாரானால் அவர் அவன் தவத்திற்குகந்து முன்னே அளித்த வரமெல்லாம் அழியும். அப்படி யழியுமாயின், ஈசன் சொன்ன சொல் தவறினார் என்னும் குற்றமெய்தும். அவரைச் சரணமடைந்த எங்கள் துன்பத்தை நீக்காவிட்டால், தம்மை யடைந்தவர்க்குத் தண்ணருள் புரியும் கிருபாநிதி என்கிற புகழுக்குக் குறைவுண்டாகும். இவையெல்லாம் கருதி, தம்முடைய திருவடி மறவாத எங்களை யாட்கொள்ளத்தக்க நல்லகாலத்தை எதிர்

பார்த்தவாராய் ஸநகாதி முனிவர்க்கு ஞான உபதேசஞ் செய்ய யோகநிலையில் அமர்ந்தருளினார்போலிருக்கிறது. அந்தப் பரமபதி அறியாத செய்கையா? சிவபெருமான் யோகநிலையிலிருப்பது கருதி நான் தேவர்களோடு இவ்விடம்விட்டுச் செல்வனேல் அவுணர்கள் எங்களைச் சிறைசெய்வது திண்ணமாதலால் நாங்கள் இவ்விடத்தைவிட்டு எங்கேயும் போவதற்கில்லை. என்னசெய்யமாட்டுவோம்? சிவபெருமான் யோகநிலையினின்று நீங்கி எங்கட்குக் காட்சி கொடுக்கும்வரையில் நாங்கள் உமது ஸந்நிதியில் இருபுறமும் காத்துக்கொண்டிருப்போம்" என்று கூறினான். நந்திதேவர், "நல்லது, அவ்வாறே செய்வாய்" என, இந்திரன் தேவர்களோடு அவ்விடத்திலேயே தங்கினான்.

இந்திரன் கைலாசமலைபோனபின் அயிராணி தன் நாயகனுக்கு அவன் கருதியகாரியம் கைகூடுமாறு தவம் புரிந்துகொண்டிருந்தாள். நெடுநாட்களாயும் அவன் வாராமற்போகவே அவ்வம்மை மனக்கவலை கொண்டாள். அதனால் அவ்வம்மையின் உடலினைத்து நாளுக்குநாள் தேய்பிறைச் சந்திரனைப்போல் மெலிந்தது.

இவ்வம்மையிப்படியிருக்கையில் சூரபன்மனுடைய தங்கையாகிய அசமுகி என்பவள் அங்கே வந்தாள். அவளோடு துன்முகி யென்னும் அரக்கியொருத்தியும் வந்தாள். அசமுகி எப்படிப்பட்ட குணமுடையவள்? பொறுமை, நாணம், கற்பு முதலிய நல்ல குணங்களொன்றுமே இல்லாதவள்; கொலை, களவு, பொய் முதலிய தீயசெயல்களுக்கிருப்பிடமானவள். மூவுல

தங்களையும் ஒரு நாழிகையில் சுற்றிவரத்தக்க திறமை வாய்ந்தவள். பிறர் எவராலும் வெல்வதற்கரிய புய பலமுடையவள்.

இந்தத்துஷ்டை அங்கே போனதும் அயிராணி யிருந்த சோலையினழகைக்கண்டு வியந்து தன்னுடன் வந்த துன்முகி யென்பவளைப்பார்த்து, "இந்த அழகிய சோலையைப் பார்த்தாயா ? இது பூவுலகத்ததல்ல வென்பது திண்ணம். இந்திரன் அமராவதியிலிருந்து கொண்டு வந்ததாகத்தானிருக்கவேண்டும். தோழி! இந்தச் சோலையில் மலர்ந்திருக்கும் மலர்களைப்பார். நாம் இதுவரையில் எங்கும் கண்டிராத மலர்களாக விருக்கின்றன. என்ன விநோதமிது ! இந்தச்சோலை யில் வசிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் யாவரோ தெரியவில்லை ! அவர்களைக் காணவேண்டும்" என்று கூறி அதனுள்ளே பிரவேசித்தாள்.

இச்சோலையில் யார் காவலாக இருப்பது? ஐய னுருடைய கட்டளைப்படி மகாகாளர் அல்லவா காவ லிருந்து வருகிறார் ? அவர் இந்தத்தீயவள் சோலைக் குள் பிரவேசிப்பதைப் பார்த்துவிட்டார். பார்த்ததும் இவள்யார் என்று உற்றுநோக்கி, "வருபவள் சூரபன் மனுடைய தங்கை அசமுகி ! இவளோடு வரும் அரக்கி இவளுக்குத் தோழிபோலும் ! இந்தக்கொடியவள் இங்கே வருவதேன் ? இவற்றை மறைந்து நின்று கவ னிக்கிறேன்" என்று கருதி அங்கொருபக்கம் மறைந்து நின்று அசமுகியைக் கவனித்துக்கொண்டிருந்தார்.

மகாகாளர் இவ்வாறு மறைந்திருப்பதை அவள் அறியாளாதலால் பெருமகிழ்ச்சியுடன் துன்முகியோடு அச்சோலையில் நெடுகலும் சுற்றிப் பார்த்துக்கொண்

டே இந்திராணியிருந்து தவம்புரியும் சூழலையடைந்தாள். அங்கே அயிராணி தவம்புரிவதைக்கண்டு பெரிய ஆரவாரத்துடன் குதூகல மடைந்தவளாய்த் தன் தோழியை அழைத்து, "பாரடி இங்கே அயிராணி தவம்புரிகின்றாள். இவள் நம்முடைய அரசனாகிய சூரபன்மனுக்கு அஞ்சி இங்கேவந்து தவம்புரிகின்றாள். இவளுடைய கொழுநனாகிய இந்திரனும் இங்கேதான் வந்திருக்கவேண்டும். அவனை இச்சமயம் இங்கே காணோம். இவளைத் தனியேவிட்டு அவன் எங்கே சென்றானோ தெரியவில்லை; தனியேவிட்டுப் போக மாட்டான். அதற்கு ஏதேனும் தக்கதொரு காரணம் இருத்தல் வேண்டும். துன்முகி, இவளுக்குத் துணையாக இங்கே ஒருவரையுங்காணோம் பார்த்தாயா? இவளை நமமுடைய அரசன் மனைவியாக அடையக் கருதி நெடுகலும் அவுணர்களை அனுப்பிப் பெரு முயற்சி செய்கிறான். இவள் இங்கே யிருப்பதை ஒருவரும் இந்நாள்வரையில் கண்டுபிடிக்கவில்லை. நான் இவளைக் கண்டுபிடிக்கவும் என் அண்ணனிடம் கொண்டு போய் விடவும் அவனிடம் நல்லபேர் பெறும் பாக்கியமும் எனக்கிருக்கும்போது ஏனையர் கண்களில் இவள் எப்படி யகப்படுவாள்? இந்தச் சுந்தரமாதை! விண்ணவர்போற்றும் மெல்லியலை! இதோ நானே பிடித்துக் கொண்டு போகின்றேன்" என்று கூறி வீரகர்ச்சனையுடன் சூற்கொண்ட மேகமொன்று புவியிலே வந்ததோவென வியக்கும்படி அயிராணிமுன் துண்ணெனத்தோன்றினாள்.

இவ்வாறு கொடிய அசமுகி அருகே சென்றதும் அயிராணி தவநிலை கலைந்து அவளை நோக்கி அச்சம

டைந்து, "யாரோ இவள்?" என்று கருதிச் சற்று விலகிப்போனாள். அப்போது அசமுகி, "அயிராணி, நில்! நில்!" என்று கூறி அதட்டிக்கொண்டே முன்னே போய் மறுத்து நின்று உன்னுடைய பேதைமையை நான் என்னவென்று கூறுவது? 'உன்னுடைய அழகை யும் இளமையையும் எனிவ்வாறு வீணாக்கிக் கொள்கி ருய் ? நீ என் உடம்பினைத்து மெலிவுறத் தவம் புரிய வேண்டும்? இந்தத் தவத்தை விட்டொழி. நிகரற்ற எழிலுடைய உன்னையடையச் சூரபன்மன் தவம் புரிந்துகொண்டிருக்கிறான். அவனுடைய பெரு மையும் வண்மையும் செல்வமும் யாருக்குண்டு ? அவன் ஆயிரத்தெட்டண்டங்களையும் ஆளும் ஆண்மை படைத்தவனன்றோ ? பிரமாதி தேவர்களில் யார் அவனுக்கு அடங்காதவர் ? போகட்டும், அவனுக்கு நிகரான அழகுபடைத்த ஆண்மகன்தான் ஒருவ னுண்டா ? சொல். அவன் அழிவற்றவனன்றோ? உன் கணவனாகிய இந்திரன் அழிவுடையவன். அவன் அழிவில்லாத பராக்கிரமசாலி. உன் கணவன் பலரை யும் வணங்குவான். அவன் அப்படி வணங்கமாட் டான். அவனை யாவரும் வணங்குவர். இத்தகைய புருஷனொருவன் உன்னை யடையத் தவம் புரியும் போது நீயேன் தானேவந்த அதிர்ஷ்டத்தைத் தள்ளு கிறாய் ? உன் கணவன் இந்திரன் அவனிட்ட வேலை களைச் செய்யும் எளியனென்பதை நானுனக்குச் சொல்லவேண்டுமா ? என் அண்ணனை நாயகனாக அடைவாயானால் தேவர்களும் அவுணர்களும் அரம் பையர்களும் உனக்குப் பணிவிடைபுரிவார்கள். நீ நிக ரற்ற உந்நதபதவியிலிருப்பாய். உனக்கு இது வேண்

டும் வேண்டாம் என்கிற குறைவே இராது. வா போ
வோம். என்னுடன் புறப்படு. வந்த நன்மையைத் தள்
ளாதே '' என்றாள்.

இவ்வாறான கொடிய மொழிகளைக்கேட்டதும்
அயிராணி, "ஐயோ! ஐயோ சிவனே!" எனக்கூறி
இரு செவிகளிலும் கைவைத்துப் பொத்திக்கொண்டு
பொருமி விம்மி, "அந்தோ இந்தக் கொடுமொழிகளைக்
கேட்டதனாலே நானடைந்த பாபம் என்னைவிட்டு
எவ்வாறு நீங்கும் ?" என்று கருதியவளாய் அவ்வாக்
கியை நோக்கி " அடி பாவி, நீ இங்கே கூறிய தீய
மொழிகளைக் கேட்டவர்கள் கொடிய நரகத்தை
அடைவார்கள். சொன்ன நீயும் கொடிய பாபத்தை
யடைவாய். இதில் ஐயமில்லை. நீ குற்றமற்ற காசிப
ருடைய மகளாயிருந்தும் மூடர்களைப்போல் இப்படிப்
பட்ட சொற்களைச் சொல்லலாமா ? துன்பம் தன்னை
அடையாதிருக்க விரும்புமொருவன் பிறருக்கும் துன்
பம் செய்வது கூடாது. துன்பத்தை அடைய விரும்
பியவனே அதனைப் பிறருக்குச் செய்வான். இதனை
நீ அறியாயா? தவம் தருமம் கற்பு முதலிய ஒன்றை
யும் சிந்தித்துப் பாராமல் நீ இவ்வாறு என்முன் பேச
லாமா ? ஆண்மையையும் ஆயுளையும் புகழையும் வாழ்
வையும் அழிக்க விரும்பியவரன்றோ இப்படிப்பட்ட
இழிந்தசொற்களைக் கூசாமல் கூறுவர். நான் யார் தெரி
யுமா ? கொண்ட கணவனையன்றி வேறெவரையும் சிந்தி
யாத கற்புடையவள். என்னிடம் வந்து நீ இத்தகைய
புன்மொழிகளைக் கூறிய இந்தப் பாபம் உன்னை உன்
உறவினரோடு மாய்க்கும். கொடுங்கோலரசன் நீடித்து
வாழ்வானா ? அவன் வாழமாட்டான். இது நிச்சயம்.

என் நாதனாகிய இந்திரன் பெருந்துன்பத்தில் மூழ்கி னான் என்று ஏசுகின்றாய்? அந்தத் துன்பம் நாளைக்கு உங்களுக்கு வாராதோ? தவறாமல் வரத்தான் போகி றது. இன்பமும் துன்பமும் ஒருபக்க நிற்பதுண்டோ? அவுணர்களாகிய நீங்கள் நீதியையும் தருமத்தையும் மறந்து இழுமாந்து திரிந்து இடர்ப்படும் பேதையர் கள். உங்கள் நட்பை ஒருவரும் விரும்பார்கள். உங்களை ஒழிக்கவே வழி தேடுவார்கள். நீ உய்ய வேண்டுமானால் இந்த எண்ணத்தை மறந்து உன் அலுவலைக் கவனி. என்னுடைய உயிருக்கும் ஐந்து பொறிகளுக்கும் என் மனமே காவலாகுமாதலால் ஒருவரும் என்னை அணுகமுடியாது. அன்றியும் நீ இங்கே இனிக்கணமும் தாமதியாதே! உனக்குக் கேடுவரும். எனக்குக் காவலில்லையென் றெண்ணாதே! எனக்கு எங்கும் காவலுண்டு. செல் விரைவில்'' என்றாள்.

அயிராணி இவ்வாறு துணிந்து கூறியதும் அந்தப் பாதகி பெருஞ்சினங்கொண்டு எயிறதுக்கி உறுமிப் பெருமூச்சுவிட்டுக் கண்களிலே கனற்பொறி பறக்க விழித்துப்பார்த்துப் பின் கையோடு கைதட்டி "நன்று நன்று" என்று நகைத்தாள். அறிவில்லாத பித்தனுக் கெடுத்துக் கூறிய உபதேசம் பயன்படா தொழிவதுபோல, அவர்கள் கூறிய நீதிமொழிக ளெல்லாம் அசமுகிக்கு ஒரு சிறிதும் பயன்படா வாயின. ஆகவே, பெருஞ் சினங்கொண்ட அவள் அயிராணியை அடியேயென் றழைத்து, உன்னைப் பொருட்படுத்தி அருகேவந்து உனக்கு இனியமொழி களைச் சொன்னேன். சொன்ன என்னை நீ வெறுத்து

மாறு சொல்கின்றாய்! உனக்கு இப்படி நன்மைகளை எடுத்துக் கூறியது தவறு. உன்னைத் துன்பப்படுத்தி என்வழிக்குக்கொண்டுவரவேண்டும். மாதே! எனக்கு மாறுசொன்ன உன்னை இந்நேரம் கொன்று தின்றிருப்பேன்! என் தின்னவில்லை தெரியுமா? உன்னை அடைய அவாவுடையவனாயிருக்கும் என் அண்ணனிடம் உன்னைக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும். அதன்பொருட்டே உன்னை விட்டேன். நீ எளிதில் என்னோடு வரமாட்டாய்போலிருக்கிறது. பிடித்திழுத்துக்கொண்டுபோகவேண்டும்; இல்லையா? நான் முனைந்துநின்றால் என்னை மும்மூர்த்திகளாலும் எதிர்த்துத் தடுக்கமுடியாது; தெரியுமா? சூரபன்மனுக்குத் தங்கை அசமுகி செய்யும் செய்கைக்கு இடையூறு செய்பவருமுண்டோ? இல்லை. எங்கணும் எக்காலத்துமில்லை. அயிராணி, இதோ உன்னைப் பிடித்திழுக்கின்றேன். உன்னைக் காப்பவர் வரட்டும் பார்க்கிறேன்" என்று கூறி ஓடி அயிராணியின் திருக்கரம்பிடித்து இழுத்தாள்.

இப்பொழுது அயிராணி பூனையின் கையிலகப்பட்ட கிளியைப்போலானபடியால், ஐயோ, ஐயோவென்றரற்றி அவசமாய்ப் பின் தெளிவுற்றுத் தேம்பியழுது,

"பையரா அமளியானும் பரம்பொருள் முதலும் நல்கும்
ஐயனே ஓலம் விண்ணோர்க் காதியே ஓலம் செண்டார்
கையனே ஓலம்எங்கள் கடவுளே ஓலம் மெய்யர்
மெய்யனே ஓலம் தொல்சீர் வீரனே ஓலம் ஓலம்

ஆரணச்சுருதி ஓர்சார் அடலுருத் திரனென் றேத்தும்
சாரணக் கடவுள் ஓலம் கடல்நிறத் தெந்தாய் ஓலம்
பூரணைக் கிறைவா ஓலம் புட்கலை கணவா ஓலம்
வாரணத் திறையேற்கொண்டு வரும்பிரான் ஓலம் ஓலம்"

என்று தான் அடைக்கலமாக அடைந்த ஐயனாரை அழைத்துக் கதறினாள். கதறவே, ஐயனாருடைய படைத் தலைவராகிய மகாகாளர், பிறைச் சந்திரனைப் போன்ற எயிறு தோன்றச் சினந்து, மின்னலைப்போன்ற வாளாயுதத்துடன் பேரிடியை யொத்த தன் குரலால் உரப்பிக்கொண்டே, "ஏமாதே, அயிராணியைத் திருடிக்கொண்டு எங்கே ஓடுகின்றாய்? நில் நில்" என்று கூறியவாறே எதிரே ஓடி மறித்து நின்று, "அம்மா, அஞ்சாதே, உன்னைத் தீண்டிய இவள் கரத்தைத் துணித்து இதோ விடுவிக்கிறேன் பார்" என்றார்.

வீரமாகாளர் கூறிய இம்மொழியைக் கேட்டதும் அயிராணி மழைவரக்கண்ட பைங்கூழைப்போல் உயிர் பெற்றாள். அசமுகி, மகாகாளரை வெறித்துப் பார்த்து, மும்மூர்த்திகளும் தேவர்கோனாகிய இந்திரனும் திக்குப்பாலகரும் என் முன்னே நிற்க அஞ்சுவார். தேவர் கூட்டத்தில் ஒருவனாகிய நீயோ என்னை இகழ்ந்து எதிர்த்தபின் தப்பப்போகிறாய்?" என்று கூறிப் பற்களை நெற நெற வெனக் கடித்து "இவனை இன்று முறித்துத் தின்று ஒழிக்கின்றேன்" என்று ஆர்ப்பரித்தாள்.

மகாகாளர், "ஏ அசுரமாதே, தவம் புரிந்து கொண்டிருந்த அயிராணியை ஏன் பிடித்திழுத்துக் கொண்டு போகிறாய்? இவளை விடு" என்றார். அசமுகி, "இவளுக்கு நீ காவலா? நீ ஏன் வருகிறாய்

குறுக்கே? நீ யாரவன்? உன்னை இவளுக்குக் காவலாக நியமித்தவன் யாவன்?" என்று கேட்டாள். கேட்டதும், "மகாகாளர் மூவுலகங்களையும் காப்பவரும் கரிய மேகத்தைப்போன்ற நிறமுடையவரும், வெள்ளை வாரணத்தை வாகனமாகக் கொண்டவருமாகிய ஐயன் என்னை இங்கே காவலிருக்கப் பணித்தார். என்னுடைய பெயர், வீரரில் வீரனான வீர மகாகாளன்" என்றார்.

இந்திரனும் கரியநிறமுடையவன்; அவன் வாகனமும் வெள்ளை வாரணம்; மூவுலகத்தை காக்குந் தொழிலும் அவனுக்குண்டு. ஆதலால் மகாகாளர் ஐயனாரைக் குறிப்பிட்டதை அசமுகி இந்திரனைக் குறிப்பிடுவதாயெண்ணி, அடங்காக்கோபமடைந்து, "ஓ, நீ இந்திரனுடைய ஏவலாளனோ? நீயா என்னை மறித்து உரப்புகிறவன்? அடே உன்னை இதோ கொல்கின்றேன்" என்று கூறித் தன் கையில் வைத்திருந்த முத்தலைச் சூலத்தை யெறிந்தாள். அந்தச் சூலம் தம்மை நோக்கி வருதலும் மகாகாளர் தமது கைவாளினால் அதனைத் தடுத்து இரண்டு துண்டாக்கினார். சூலந் துண்டானதும் அசமுகி பெருங் கோபங்கொண்டு, தன் தோழி துன்முகியினுடைய காத்திலிருந்த சூலத்தை வாங்கி "துன்முகி, நீ இந்த அயிராணியைப் பிடித்துக்கொள்; இதோ இவனுயிரை இந்தச் சூலத்திற்கு இரையாக்கி விட்டு மறுவேலை பார்க்கிறேன்" என்று கூறி வீர மகாகாளருடைய மார்பின்மேலே தாக்கும்படி அந்தச் சூலாயுதத்தை வீசி யெறிந்தாள். வீரமகாகாளர் அந்தச் சூலத்தைத் தமது வாட்படையினாலே தடுத்து அதனை இரண்டு துண்டாக்கினார். அப்பால் அசமுகி

அங்கிருந்த ஒரு மலையைப் பறித்து வந்து வீரமகா காளர்மீது எறிந்தாள். வீரமகாகாளர் அந்த மலையை யும் தமது வாளினாலே சிதைத்தழித்தார். அவ ருடைய வாட்படையும் ஒடிந்தது. அதன்மேல் அச முகி வீரமகாகாளரை வெறித்துப் பார்த்து, "வீரமகா காளனே, பிரமாதி தேவர்களெல்லாம் வாழ்த்துக் கூறும்படி மேலான நிலையிலிருக்கும் என் அண்ண னுகிய சூரபன்மனுக்கு இவளைக்கொண்டு போகின் றேன். நீ தடுப்பது முறையல்ல. என் தமையன் மார்களாகிய சூரன், சிங்கமுகன், தாரகன் ஆகிய இவர் களை எளியரென எண்ணினாய்போலும்! தாரகாசுர னுடைய சேனைவீரரில் ஒருவன் வந்தால் நீ தப்ப மாட்டாய்!" நான் இப்பொழுது பெரும் பசியோ டிருக்கிறேன். உன்னை உண்டால் அந்தப் பசி தணி யாது. அதனால் உன்னைக் கொல்லவில்லை. வீணே என் இறக்கின்றாய்! தப்பி ஓடிப் பிழை" என்றாள்.

இவ்வாறு அசமுகி கூறியதும் மகாகாளர், "உன் வீரப்பேச்சை நிறுத்து. நீ பெண்ணாகையால் உன் னைக் கொல்வது நியாயமல்லவென்று கருதி உன்னைக் கொல்லவில்லை. சிறிதும் தாமதியாமல் அயிராணியை விட்டுச் செல். உன் தமையன்மாருக்கு நான் அஞ் சினவனன்று. நீ அடாத செய்கை செய்கின்றாய்! மீறி நடப்பாயானால் அல்லற்படுவாய்" என்றார்.

அசமுகி, "இவன் கையிலே படையில்லை. படை யில்லாதவனோடு சண்டையிடுவது முறையன்று. அன் றியும் இந்த வீரனை வெல்வதரிது. இனால் நமக்காக வேண்டியதென்ன? அயிராணியைக் கொண்டு போ தலே இனிச் செய்யத்தக்கது" என்று சிந்தித்துக்

தோழியின் கைப்பட்டிருந்த அயிராணியைப் பிடித்து இழுத்துக்கொண்டேகினள்.

மகாகாளர், "கொடியவளே, நில்! உனக்குக் கேடு காலம் கிட்டிவிட்டது" என்று கூறிக்கொண்டே அவளை மறித்து நின்று அவளுடைய கூந்தலைக் காத்தினாலே பிடித்திழுத்து உடைவாளை யுருவி அயிராணியைப் பிடித்துக்கொண்டிருந்த காத்தை வெட்டி அவளை விடுவித்தார். உடனே அவ்வரக்கியைக் காலினாலுதைத்துருட்டித்தள்ளிவிட்டு அருகில் நின்றுகொண்டிருந்த துன்முகியைப் பிடித்து "பிரபாதியாகிய அயிராணியை நீயும் உன்னுடைய கொடுங்கை கொண்டு தீண்டினையன்றோ? உன் கையைக் குறைத்தல் வேண்டும்" என்று கூறி அவளுடைய காத்தையும் வெட்டி அவளையும் காலாலுதைத்துத் தள்ளினர். இவ்வாறு தள்ளவே அவர்களிருவரும் பெருங் கூச்சலிட்டுப் புலம்பி யழுது வெட்டுண்ட மரம்போல் நிலத்திலே சாய்ந்தார்கள். இரத்தம் பெருகாநின்ற அவ்விருவருடைய காங்களும் சூரபன்மனுடைய செல்வத்தைச் சுட்டழிக்கத்தக்க கொள்ளிக் கட்டைகளைப் போலிருந்தன.

---

## அத்தியாயம் 6

இவ்வாறு காத்தை யிழந்த அசமுகியும், துன்முகியும் நிலத்திலே புரண்டு புரண்டு அழுதார்கள்; இன்னொரு காத்தால் நிலத்திலே ஓங்கி ஓங்கி யறைந்து அறைந்து ஓலமிட்டார்கள். அசமுகி எழுந்தோடி "இதோ இந்த அயிராணியைப் பிடித்தாண்பேன்" என்று கூறி ஆர்ப்பறித்தாள்; போவாள் ஒருபக்கம்

வருவாள் மீண்டும்! வீழ்வாள் வெட்டுண்ட மரம் போல்! எழுந்து சாய்வாள்! பின் இரங்குவாள்! சோர்வாள்! இதழைக் கடித்துக் குதித்துக் கனற் புகையெழ விழிப்பாள்! அப்பொழுது இதழினின்று இரத்தம் வெளிப்படும். அந்த இரத்தத்தைக் குடித்துக்கொண்டே வெறிகொண்டவளைப்போல் ஓடி மீள்வாள்! குடித்த இரத்தத்தைக் கொப்பளிப்பாள்! இடியைப் போல் ஒலியுண்டாகும்படி பற்களை நெறநெற வென்று கடிப்பாள்! "ஆகா! நாம்செய்த இச்செய்கை நன்றாயிருக்கிறது!" என்று சிரிப்பாள்! விரலை மூக்கிலே வைத்துக்கொண்டு வியப்படைவாள்! அடிக்கடி நிலத்தை உதைத்து வாயிலிருந்து தீயை உமிழ்வாள்! உம் என்று உரப்புவாள்! உருமுக்காள்ளெனை இம்மென்று சினப்பாள்! எரியெழ விழித்து மகாகாளரைப் பார்ப்பாள்! உடம்பு வெயர்ப்பாள்! வெள்குவாள்; வெட்டுண்ட கரத்தை இன்னொருகரத்திலெடுத்துப் பார்த்துக் கண்களில் ஒற்றிக்கொள்வாள்! விழிகளிலிருந்து இரத்த நீர் பெருக்கிக்கொண்டே "இப்படிப்பட்ட துன்பம் என்னைப்போல் அநுபவித்தவர் யாவர்?" என்பாள்! இனிச் சாகவேண்டியதுதான் என்பாள்! "வினையினேனுக்கு இதெதாவதோ" என்பாள்! ஐயோ அந்தோ என்றரற்றுவாள்; அடைதற்கரிய புகழுடன் விளங்கும் என் அண்ணன்பால் நான் எப்படிப்போவேன்?" என்பாள்! "கணவர்கள் என்னைக்கைதொடக் கூசுவார்களே" என்று கூறுவாள்! "ஐயோ மூடம் என்று இகழுவார்களே" என்பாள்! "என்ன செய்வேன்! எப்படி உலாவுவேன்!" என்று பிதற்றுவாள்! "இப்பொழுதே தேவர்களெல்லாரையும் கொன்று

உலகத்தை ஒழிப்பேன்" என்று சீறுவாள்! "பூவுலகத்திலுள்ள உயிர்களெல்லாவற்றையும் அழிப்பேனே" என்பாள்; "வடவாமுகாக்கினியை அவிப்பேனே" என்று கூறுவாள்! "காற்றைப் பிடிப்பேனே" என்றும் "மேருமலையை அசைப்பேனே" என்றும் "சூற்கொண்ட மேகங்களைப் பிடித்துண்பேனே" என்றும், "நக்ஷத்திராதி கோள்களைக் கொறித்திடேனே" என்றும் கூறுவாள்! "சிறப்புப்பொருந்திய என் கரத்தையிழந்து நான் தவிப்பதைப்பார்த்து இந்தச்சூரியன் இகழுவான்போலும்! இவனைப் பிடித்துக்கொண்டு வருதற்கு எழுந்திருக்க மாட்டேனே" என்றும் "இந்தப் பரிதியைக் கரித்துச் சூழ்ச்சிசெய்யும் தேவர்களெல்லாரையும் அடிகிலாக்கி உண்டு எழுகடல்களையும் உறிஞ்சிக் கையைப் பெரும்புறக் கடலிலே கழுவித் திரும்புவேனே" என்றும் கூறுவாள்! "தென்னங்காய்க்குள்ளிருக்கும் சுவையுள்ள பயனைச் சுவைத்திடுவதுபோல இந்தச் சந்திரனைப் பிடித்துக் கவ்வி அமிர்தத்தினைச் சுவைத்துப் பின்பெறியேனே" என்பாள்! இந்திரனுடைய யானையையும் ஏனைய திக்கு யானைகளையும் பாக்காக வாயிலேகொண்டு ஐந்து கற்பகத் தருக்களையும் வெற்றிலைகளாகவும் அவற்றின் வெண்மலர்களைச் சுண்ணமாகவுங் கொண்டு உண்பேனே" என்பாள்! "பாம்புகளைப் பிடித்துத் தலைகீழாகத் தூக்க மாட்டேனே" என்றும் "பாதாளவாசிகளை அவ்விடத்திலிருந்து நீக்க மாட்டேனே" என்றும் "பூமியைச் சுழற்றி மேலுள்ளவற்றைக் கீழாக்கமாட்டேனே" என்றும் "முன் மகாவிஷ்ணு அதனை யுண்டதுபோல் உண்ணமாட்டேனே" என்றும் கூறுவாள்!

சூரபன்மனுடைய தங்கையாகிய அசமுகி வீரவன்மை வாய்ந்தவ ளாதலால் இவ்வாறு சொல்லிச சினந்துகொண்டாள். அவள் இறக்கவும் துணிந்தாள். அவளைப் போல்கரத்தை யிழந்த அவளுடைய தோழி துன்முகி என்னசெய்தாள்? அவள் " அந்தோ இவளோடுவந்து கையை இழக்கநேரிட்டதே என்கிற துக்கத்தியில் வீழ்ந்து தவித்தாள். பின் அசமுகியின் முன் போய் "தலைவியே, தேவர்கள் என்னசெய்வார்கள்? மலைகளும் கடல்களும் என்ன செய்யும்? நீ உலகங்களை யெல்லாம் அழிப்பதாகச் சினங்கொண்டது முறையோ? பூவுலகத்தையும் வானுலகத்தையும் திசைகளையும் உயிர்களையும் நீ ஒருங்கே அழிக்க நினைத்தாய்; அப்படிச் செய்தால் ஒருவரும் உன்னை ஒன்றும் செய்யப்போவதில்லை. அவைகளுக்கெல்லாம் நாயகனை உன் அண்ணனாகிய சூரபன்மனே உன்னைக் கோபித்துக்கொள்வான், அவனுடைய செல்வங்களை யழியும், ஆதலால் இவைகளொன்றையும் மனத்திலெண்ணாதே. அண்ணனிடத்திற் கோடி இவைகளை யெல்லாம் நாம் கூறுவோமேயானால் அவன் தேவர்களை யெல்லாம் அழித்துப் பகை முடிப்பான். அந்த வேலைக்கு அவனே அதிகாரியாவான். ஆதலால் அவனிடமே போவோம். புலம்பாதே! தக்ஷன் முன் யாகம் செய்தானல்லவா? அந்த யாகத்தில் தேவர், அரம்பையர், அசுரர் இவர்களில் யாவரே அடிபடாதவர்? பரமபதியாகிய சிவபெருமானுக்கும், அவரைச் சரண்புகுந்த மெய்யன்பர்களுக்குமே யல்லாமல் வேறெவர்க்குத்தான் விதிவசத்தினாலே வந்தெய்தும் துயரம்விட்டு நீங்கும். அன்றியும் இன்பமும் துன்பமும் அறியாமையும் உயிர்

களுக்கு முறைமுறையாய் வருவதில்லையன்றோ? புலம்பாதே! வா போவோம்" என்று கூறி அவளைத் தேற்றினாள்.

இவ்வாறு துன்முகி தேற்றியதும் அசமுகி மனந் தேறி "தோழி, அவ்வாறே செய்வோம். நீ சொல்வது போல் நாம் கோபிப்பதால் யாது பயன்?" என்று கூறி எழுந்து தன்முன் ஒருசிறிதும் அச்சமின்றி நிற்கும் அயிராணியைப் பார்த்து, "அடி, என் அண்ணன் சூரபன்மனுடைய ஆக்ஞாசக்கரம் செல்லாத இடமுண்டோ? சகல அண்டங்களிலும் செல்வதன்றோ? ஆகையினால் நீ அண்டத்தின் இப்புறத்தில் ஒளிந்துகொண்டாலும் தப்பமாட்டாய்! அப்புறத்தில் ஒளிப்பினும் தப்பமாட்டாய்! ஒளிந்துகொண்டு திரியும் உன் கணவனையும் இவ்வனத்தில் மறைந்து வசிக்கும் உன்னையும் ஏனைய தேவர்களையும் எங்கள் நகரத்திற்கு இழுத்துக் கொண்டுபோய்ச் சிறைப்படுத்தும்படி செய்கிறேன். இதனை நிச்சயமென நம்பு. இது வீண் வீரப்பேச்சல்ல. அப்படி உங்களை நான் சிறைப்படுத்தாவிட்டால் உலகமுழுவதையும் ஆளும் மகாவீர பராக்கிரமசாலியாகிய சூரபன்மனுடைய தங்கையல்ல; தெரிந்ததா? நான் ஒரு பேடி! இதனை மனதிற்கொள்ளக் கடவாய்" என்று சொல்லி அவ்விடத்தைவிட்டு அகன்றாள்.

கொடியவளாகிய அசமுகி இவ்வாறு உரப்பிவிட்டுத் தன் தோழி துன்முகியோடு சென்றதும் மகாகாளர் அயிராணியையழைத்து, "நீ அஞ்சாதே; உன் நாயகன் வருமளவும் நான் உன்னைக் காப்பாற்று

கிறேன். நீ இங்கேயே யிரு, உனக்கு ஒரு சிறு துன்பமும் நேராது" என்று கூறிச் சென்ருள்.

அப்பால் இந்திராணி, இனத்தைவிட்டுப் பிரிந்த ஒரு பிணை மானைப்போல் அந்த வனத்தில் தன் நாயகன் நினைத்துச் சென்ற கருமம் நிறைவேறுவதுகருதித் தவம் புரிந்துகொண்டிருந்தாள்.

இப்படி இங்கே நிகழ்ந்த சம்பவங்களை யெல்லாம் உணர்ந்த நாரதமுனிவர் விரைந்து திருக்கைலாச மலையையடைந்து அங்கே நந்திதேவர்க்கருகே தேவர்களுடன் இருந்துவரும் இந்திரனைக்கண்டு அயிராணி அசமுகியால் அடைந்த துன்பத்தையும் மகாகாளர் அவ்வரக்கியைத் தண்டித் தோட்டியதையும் கூறிச் சென்ருர்.

இந்திரன் அச் செய்தி கேட்டதும் சினமும் கவலையும் அடைந்தான்; அப்பால் சிவபெருமானுடைய திருவருளை யெண்ணி அவர் விதித்த விதியைச் சீர்தூக்கிப் பார்த்துப் பரம கருணாநிதியாகிய அவரைப் புகழ்ந்து துதித்துப் பின் தன்னுடனிருக்கும் தேவர்களை நோக்கி, "ஈசனுடைய கருணை நமக்கென்று கிடைக்குமோ தெரியவில்லை. அவருடைய கருணை பெற்றுலன்றி நாம் உய்யும் வழியில்லை. ஆதலின் நாம் அவரை நோக்கித் தவம் புரியச் செல்வோம்" என்று கூறி அவர்களுடன் சென்று நந்திதேவருடைய திருவடி பணிந்து, "நாங்கள் இங்கே வந்து நெடுங்காலமாயிற்று. இதுவரையில் ஈசனுடைய திருவருளை எதிர்பார்த்தவர்களாய்க் காத்திருந்தோம். முன்னே நாங்கள் இழைத்த தீவினை கருதி அவர் எங்களுக்குத்

திருவருள் செய்யவில்லை. அந்தப் பரமபதி எங்களுக்குத் திருவருள் செய்யும்படி நாங்கள் பூவுலகிலே போயிருந்து தவம் புரிகிறோம். அநுமதி தந்தருளல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான்.

நந்திதேவர் "நன்று; தவத்தினால் சகல காரியங்களும் கைகூடும். தவமே பாபத்தைப் பரிகரிக்கும். ஈசன் கிருபையைக் கூட்டுவிக்கும். போங்கள்'' என விடையளித்தார். அப்பால் இந்திரன் தேவர்களோடு அங்கிருந்து புறப்பட்டுச் சீர்காழியை யடைந்தான். அங்கே வீரமாகாளரைக் கண்டு வணங்கித் தழுவிப் பல உபசாரவார்த்தைகள் கூறி அவரை ஐயனரிடம் அனுப்பிவிட்டு அயிராணி தவம்புரியு மிடத்திற்குச் சென்றான். அயிராணி தன் நாதனைக் கண்டதும் எழுந்து வந்து அடிபணிந்து நின்று அசமுகி வந்து தன்னைத் துன்புறுத்தியதையும் மகாகாளர் வந்து தன்னை அவளிடமிருந்து விடுவித்து அவளைத் தண்டித்தனுப்பியதையும் அவள் கூறிப்போந்த சபத மொழிகளையும் கூறினாள். இதைக் கேட்டதும் இந்திரன், "சூரபன்மனுடைய தைமகிமை பெரிதாயிருக்கிறபடியால் இச்சமயம் நாம் அவனை வெல்வதற் கியலாது. அவனுடைய பராக்கிரமமே நம்மை அடக்கும். ஆதலின் நாம் இங்கே இருப்பதற்கில்லை. நாம் தேவர்களோடு மேருமலைக்குப் போய் மறைந்திருந்து தவம் புரிவோம்'' என்று கூறிப் பின் தன்னுடனிருந்த தேவர்களை அழைத்துக்கொண்டு அயிராணியுடன் மேருமலையிலே போய் மறைந்திருந்தான்.

அந்தோ! தேவர்களெல்லோரும் திருவடிதொழ அரம்பையர் நடனஞ்செய்ய கந்தர்வர்பாட திவ்ய சிங்

காதனைத்தமர்ந்து பிரஹஸ்பதி முதலிய பெரியாருடன் சம்பாஷணை செய்துகொண்டு மகா உந்நத பதவியி லிருந்த இந்திரனுடைய கதி இப்படி யாயிற்றென்றால், பூலோகத்திலுள்ள நாம் நம்முடைய வாழ்வைச் சத மென்றும் பெரிதென்றும் நிலையானதென்றும் கூறிப் பெருமை பேசிக் கொள்வதெவ்வாறு பொருந்தும்? அவ்வாறு பெருமைபேசிக் கொள்வதும் இறுமாப் படைவதும் பேதைமையே யன்றோ?.

---

## அத்தியாயம் 7

இனிமேல், கை வெட்டுண்டு சென்ற அசமுகி யைக் கவனிப்போம். அசமுகி காற்றினும் கடிய வேகத்தினளென்றோமன்றோ? சாதாரணமாகவே அவ் வாறு நடப்பாளென்றால் இப்போது கேட்க வேண் டுமா? இப்போது கோபாவேசமும் கூடியிருக்கிறபடி யால் அவளும் துன்முகியும் மாயமாகச்சென்று மகேந் திரபுரிபோய் சூரபன்மன் வீற்றிருக்கும் கொலுமண்ட பம் அடைந்தனர்.

சூரபன்மன், தடையின்றி எங்குஞ் செல்லத்தக்க ஆக்ஞாசக்கரமும் புகழுமுடையவனன்றோ? அந்த ஆக்ஞா சக்கரமும் புகழும் இரண்டுருக் கொண்டு இருமருங்கிலும் நிற்பதுபோல் இரண்டு அவுணர்கள் வெண்கொற்றக்குடைகள் நிழற்றவும் உவர்க்கடலும் பாற்கடலும் இரண்டுருவாய்வந்து அமர்ந்ததுபோல் தாரகனும் சிங்கமுகனும் இருமருங்கிலும் அமர்ந்திருக் கவும் அக்கினி தேவர்களைப்போல் அமைச்சர்களும் புதல்வர்களும் ஒருபக்கமிருக்கவும் சகல வண்டங்க

ளிலுமுள்ள வாயுக்களும் வருணர்களும் ஒருங்கே கூடி வந்து போகியவெளியில் பனித்திவலைகளைத் தெளித்துத் தன்னுடையபாதத்திலே வணங்கி எழுவதைப்போல், இருமருங்கும் அவுணர்கள் நின்று வீசும் சாமரங்கள் இலங்கவும் வெற்றிலை, பாக்கு, சுண்ணம் மூன்றும் நிறைந்துள்ள தட்டையும், சில சூரியர்களையேகொண்டு வந்துவிட்டனரென்று வியக்கத்தக்க கெண்டிகையையும் சில அவுணர்கள் ஒருபக்கம் ஏந்தி நிற்கவும் பொன்னி லைத்திலே சிவப்பு மணிகளைப்பெய்தாற்போல் தம்பல முமிழும் பொற்காளாஞ்சியைப் பல ஏவலாளர் ஒரு புறம் ஏந்திநிற்கவும் இளந்தென்றலானது மேகங்களின் மீதும் சந்திரன் மீதும் படிந்து பாற்கடலிலும் அதற் கப்பாலுமுள்ள பெரும்புறக்கடலிலும் தோய்ந்து விண்ணிலும் மண்ணிலுமுள்ள சோலைகடோறும் போ யுலாவி ஒரு சிறிதும் ஒலி செய்யாமல் மெல்ல மெல்ல வந்து தன்முன் வீசவும், மேகங்களானது சந்திரனிட மிருந்து அமுதத்தினைப்பருகி, கற்பகச் சோலையில் அதனைக் கொட்டி, பலபகல் கழிந்தபின்னர் அங் கிருந்து கவர்ந்துவந்து கட்புலனுக்குத்தெரியாத சிறு துளிகளாக எப்போதும் சிதறவும், அரம்பையர் முத லிய அப்ஸரஸ்திரீகள் ஒருபுறமும் யக்ஷகந்தர்வ ஸ்திரீ கள் ஒருபக்கமும் அசுர இராக்ஷஸ மாதர்கள் ஒரு பக் கமுமாக நின்று நடிக்கவும், வழக்கப்படி பஞ்சாங்கம் சொல்லவந்திருக்கவும் பிரமதேவர் சமயத்தை எதிர் பார்த்தவராய் ஒருபக்கம் ஒதுங்கி நிற்கவும், பிரமதேவ னுடைய மைந்தர்கள், நீர்க்குடங்களிலே நாழிகை யைப் பார்த்துக் கொண்டிருந்து தவறாமல் நாழிகைப் பறையை ஒலித்து ஒவ்வொரு நாழிகையையும் முறை

மூன்று தெரிவிக்கவும், புலிகள் பல நிறைந்துள்ள இடத்தில் மான்கள் புகுந்தது போல் அவுணர்கள் நிறைந்துள்ள இங்கே முனிவர்கள் பலர் வந்து ஆசிர் வதித்து நிற்கவும், மேருமலையிலே மறைந் துள்ள தேவர்களைத் தவிர ஏனைய தேவர்களெல்லோரும் வாயிலில் அவுணர்கள் நெருக்கித்தள்ளத் திணறிக் கொண்டு உள்ளே போய், எதிரே வரும் அவுணர்கள் வாயில் வரையிலுந்தள்ளப் பின்னே வந்து வாயிற்காவலாளர் புடைக்க நெருக்குண்டு தவித்து சபையைக் காணப்பெறாமல் இங்குமங்குமாய்த்திரியவும், சடையிட்ட அவுணர்கள் பலரும், கோபத்தையே ஆடையாகவுடைய அவுணர் பலரும், பொற் பிரம்பைக் கரங்கொண்ட அவுணர் பலரும், இடிபோலூப்பும் அவுணர்பலரும், பிறைபோன்ற வக்கிரதந்தமுடையவர் பலரும் ஆங்காங்கிருந்து தேவர்களுடைய மகுடங்களுடையும்படி அடிப்பவர் பலருமாகநின்று சபைக்கு வருகிறவர்களை அவரவர் தகுதிக்கேற்றபடி தூரத்தியும் நிறுத்தியும் வீற்றிருக்கவைத்தும் அதிகாரம் செலுத்தவும், பணிப்பெண்கள் வாழ்த்தி ஆலத்தி சுற்றவும் கின்னரர், கிம்புருடர், சித்தர், யக்ஷர், கந்தர்வர் ஆகிய இன்னோர் இருமருங்கும் வரிசையாய் நின்று மங்கள கீதங்கள்பாடவும் தான் வேள்வி புரிந்ததையும் தவஞ் செய்ததையும் சிவபெருமான் தனக்கு இரங்கி வரமளித்ததையும் அப்பால்தான் ஆயிரத்தெட்டண்டங்களையும் ஆண்டுவரும் நேர்மையையும் பல அசுரர்கள் அருகிலிருந்து அடிக்கடி புகழ்ந்து பேசவும் திக்குப்பாலர்களும் ஏனையரும் கைகுவித்துத்தொழுது தூவும் மலர்களையும் தன்குலகுருவாகிய சுக்கிரனும் முனிவர்களும்

ஆசீர்வதித்துத தூவும் மந்திராக்ஷதங்களையும் வாயுபக வானனவன் எப்போதும் பெருக்கி ஒரு பக்கம் குவித் துக் கொண்டேயிருக்கவும் ஆடுவோர், பாடுவோர், தன்மீது அன்புசெய்வோர் ஆகிய இன்னோருக்குக் கிரீடம் அஸ்தகடகம் முதலிய அணிகலன்களையும் ஆடைகளையும் நிதிக்குவைகளையும் பிறவற்றையும் அவர்கள் தங்கள் கரங்களை நீட்டும் போதெல்லாம் சிறிதுந் தாழாது தன்கைகொடுக்கவும்—சூரபன்மன் அத்தாணிமண்டபத்தில் அழகியதோர் சிங்காதனத் திலே வீற்றிருந்தான்.

அந்தச் சிங்காதனம் ஆயிரகோடி பொற்றூண் களையும் பலவகை வர்ணங்கள் இட்டப்பெற்ற ஓவியங் கள் பலவற்றையும் நிலைக்கண்ணாடிகளையும் விதவித மான விதானங்களையுமுடையது; சாமரங்களும் புடவைக் குஞ்சாங்களும் இடையிடையே தோய்க்கப்பெற் றதும் ஆயிரம்யோசனை பரப்புடையதுமாகிய அத் தாணி மண்டபத்தின் நடுவே விளங்குவது. அது பொன்னிலே செய்து நவரத்தினங்களும் அழுத்தப் பெற்று இணையீடற்றதாய் இலகுவது.

சூரபன்மன் இத்தகைய மகா உன்னத நிலையில் அரசிருக்கும்போது அசமுகி மகேந்திரபுரிக்கருகே போய்ச்சேர்ந்தாள். அவள் துன்முகியுடன் அவ் வூரையடைந்தது, அந்நகரமும் அதன் செல்வமும் அழிவதற்காக மூதேவி தன்தோழியோடு வந்தாற் போலிருந்தது. அசமுகியின் வெட்டுண்ட கை நெடுக இரத்தஞ்சொரிந்திருந்தது. அவ்வாறு இரத்தம்சொரிந் திருந்தது மகேந்திரபுரி இனியடையும் துன்பத்திற்கு ஒருவழிகாட்டியதுபோலிருந்தது. அந்தக்காட்சியைக்

கண்ட அந்நகர அவுணர்யாவரும் "இழிந்த இச்செயலைச்செய்தார் யாவர்?" எனவருந்திச் சினங் கொண்டனர். அங்கே சூதாடிக்கொண்டிருந்தவர் சிலர் அந்த ஆட்டத்தை விட்டெழுந் தோடிவந்தனர். ஆட்டுக்கடாச் சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களிலே சிலர் அதனை விட்டு ஓடிவந்தனர். யானைச் சண்டையைக்கண்டு களித்துக் கொண்டிருந்தார் பலர் அதனைவிட்டு ஓடிவந்தனர். கோழிச்சண்டையைப் பார்த்துக் குதூகலங்கொண்டிருந்தார் பலர் ஒருங்கே திரண்டு ஓடிவந்தனர். குதிரைகளையும் யானைகளையும் விமானங்களையும் வண்டிகளையும் செலுத்தப்பழகியவர் அதனை விட்டு ஓடிவந்தனர். குறிகள்வைத்து அவற்றையடித்து ஆயுதவித்தைபயின்று கொண்டிருந்தவர்கள் பலர் அதனை விடுத்து வந்தார்கள். யாழ், வீணை, குழல் முதலியவைகளை வைத்துக் கொண்டு சங்கீதம் பாடி இன்ப மநுபவித்துக் கொண்டிருந்தவர்பலர் அதனைவிட்டோடிவந்தனர். நாடகம் நடித்துக்கொண்டிருந்தவர்கள் பலரும் கூத்தாடிக் கொண்டிருந்தவர்கள் பலரும் உடம்பில் வெயர்வெழ ஓடிவந்தார்கள். சிலர் விவாகச்சடங்குகளைச் செய்துகொண்டிருந்தனர். அவர்களும் அவைகளைவிட்டகன்று ஓடி வந்தார்கள்.

இவ்வாறு வந்து அசமுகியைக்கண்ட அவ்வவுணர்களெல்லாரும் பெருந்துயரமடைந்து யாவர் இக்கொடுமை செய்தவர் என்றெண்ணிவியந்து மனம் பதைத்துக் கண்களில் நீரைப்பெருக்கினார்கள்; புகையும் கனலும் வெளிவரப் பெருமூச்சுவிட்டனர். அந்தகனையும் கயமுகாசுரன் முதலிய அசுரர்களையும் திரிபுரங்களைவைத்துக்கொண்டு திரிந்தகொடிய அசுரர்களை

யும் அவர்களுடையபுரங்களையும் அழித்த சிவபெருமா னுடைய செய்கையோ இது? மகுடாசுரன், நிசும்பன், இரத்த நேத்திரன், இரத்த பீசன், தாரகன் முதலிய கொடியவர்களை மாய்த்த துர்க்காதேவியின் செயலோ இது ? இன்றேல் ஐயனுருடைய செய்கையோ இது ? இவர்களையல்லாமல் வேறெவர்களால் இவ்வாறு துணி வுடன் இச்செய்கையைச் செய்வதற்காகும் ?" என் பார் பலர். "நமது குலத்தவனாகிய கயமுகனை வதைத்த விநாயகக்கடவுளுடைய செயலோ இது ?" என்றை யுறுவார் பலர். " சங்குகன்னன், குண்டோதரன், பானு கம்பன் முதலிய தேவகணங்களின் செயலோ இது ?" என்பார் சிலர். " மகாவிஷ்ணுவினுடையசெய்கையோ இது? சை அப்படியிராது ; அவன் அஞ்சுவான்" என்பார் பலர். " பிரம்மதேவனுடைய செய்கையோ இது ? சி! அவன் இதனைச் செய்யநெஞ்சிலும் நினைப் பானோ ?" என்றெண்ணுவார் பலர். "விண்ணவர்க்கிறை வனாகிய இந்திரனுடைய செயலென்பதற்குமில்லை. அவன் மறைந்து திரிகின்றானே" என்பார் சிலர். " ஏனைய தேவர்களெல்லாரும் நமக்குப்பணிவிடைபுரி வதால் அவர்கள் செயலென்று கூறுவதற்குமில்லை" என்று கூறுவார் பலர். " அந்தோ இச்செய்கை செய் தவன் உயிரோடு வாழப்போகிறானோ இனி ?" என்று கூறுவார்பலர். " முனிவர்களுடைய சாபத்திற்காளாய் இவ்வாறு கரமிழக்கநேர்ந்ததோ " என்று கூறுவார் சிலர். " இவ்விருவரும் தங்களுக்குள்மாறுபட்டுச் சண் டைசெய்து ஒருவர்கரத்தை மற்றொருவர் வெட்டினா களோ ?" என்று கூறுவார் சிலர். "இந்த அசமுகியின் கரத்தையும் வெட்டவல்லவருண்டோ இவ்வுலகில் ?

மயக்கங்கொண்டலேயும் இவள் யாரிடமோ பேராசை கொண்டிருக்கிறாள்; அதன்மேல் 'என்னுடைய உறுப்புகளிலொன்றை அடையாளமாகத் தருவேன்' என்று கூறித் தன கையைவெட்டிக்கொடுத்திருப்பாள்'' என்பார்கள் இவளுடைய நியகுணங்கள் கண்டுணர்ந்தார் பலர். சிலர், ''இவளை நெருங்கி இவ்வாறு உன் கை வெட்டுண்டதேன்—என்று கேட்கலாமா'' என்று கருதுவார்கள்; பின் ''இவள் மகாதுஷ்டை, இவளைக் கேட்டால் கேட்ட நம்மீது சினங்கொண்டு சீறி விழுவாள்'' என்றெண்ணி ஒதுங்குவார்.

இவ்வாறு அவுணர்கள் அநேகர் மயங்கி நிற்க, அவுணமாதர்கள் அநேகர் வீதிகடோறும் கண்ணீரும கம்பலேயுமாய் நின்று பெருந்துயருற்றனர். இவ்வாறு எல்லோரும இரங்கி யேங்க, அசமுகி, துன்முகியுடன் தலைவிரிகோலமாய் நடந்து சென்று சூரபன்மனுடைய அத்தாணி மண்டபவாயிலையடைந்து ''ஆ என் அன்னையே, தமையன்மார்களே, மருகர்களே,'' என்றழைத்துப் புலம்பலுற்றாள்—

முன்னே சிவபெருமான் வரமளித்த அந்நாளில, ''உங்களை விட்டுப்பிரியாமல் காப்பேன்'' என்று கூறினாய்; அந்தவாக்கை இப்போது மறந்துவிட்டாய் போலிருககிறது. அந்தோ என்னுடைய கரம் வெட்டுண்டதை நீ அறியாயோ? அஞ்சாதே என்று கூற நீயேன் இன்னும் வரவில்லை? ஐயோ, என் அன்னையே! சிறியேனாகிய நான் பெண் பிறந்து பட்ட பரிபவம் என்று தீருமோ? தந்தையானவன் பெற்ற தன்மைந்தரிடத்திலே விருப்பமுடையவராயிருப்பர். தாயானவள் தான் பெற்ற பெண்களிடத்திலே விருப்பமுடை

னாலேதான் இந்தக்கேடு எனக்கு நேர்ந்தது. அந்த இந்திரனுடைய செய்கை வீட்டுக்கூரையில் நெருப்பை மறைத்துவைத்திருந்ததற்கொப்பாயிற்று. “ எள்ளின் பிளவையொத்த சிறுமையினை யுடையதானாலும் உட்பகை ஏற்பட்டிருக்குமாயின் அது எத்துணைவலியார்க்கும் கேட்டையே விளைவிக்கும்” என்று அறிஞர் கூறுவர். அஃது உண்மையாயிற்று. நம்முடைய ஏவல் புரிந்துழன்ற இந்திரனே என் கரத்தைத் துணித்தவன். அவன் கள்ளத்தனமாய் மறைந்திருக்கிறான். இதனை அறியுங்கள். அறியுங்கள். கடலின் நடுவேயிருக்கும் வடவாமுகாக்கினி காலம் பார்த்துக் குவலய முழுவதையும் ஒழிப்பதுபோல் அங்கேயிருந்து என்கரத்தைத் துணித்த வீரமாகாளனும் இனி உங்களையும் அழிப்பான். இது திண்ணம். அந்தோ! தேவர்களை எளியவரென்று இகழ்ந்தீர்களே! இரணியனுக்கு மூன்று தலைகளும், அக்கினிமுகனுக்கு இரண்டுதலைகளும், வச்சிர வாகுவுக்குப் பத்துத்தலைகளும் இருக்கின்றன ! இருந்தென்னபயன் ? ஒருதலையையுடையவனன்றோ என் கரத்தை வெட்டியவன்? சிறு குழந்தைப் பருவத்தில் தன்மீது சூரியனுடைய இளம் வெயில் படக்கண்டு சினங்கொண்டு அவனை விரைவிலே பற்றிக்கொண்டுவந்த என் மருகனே, பானுகோபனே, அந்தோ, உன்னுடைய அத்தையாகிய என்னுடைய கரத்தை ஒருவன் துண்டித்துச் செல்வதா ? நீயேன் இதைப்பற்றிக் கேட்காமலிருக்கிறாய் ? அந்தோ ! அண்ணா தாரகா ! நீ எங்கே போனாய் ? உன்வரமும் உரமும் எங்கோடி ஒளிந்தன? வஜ்ரதரனாகிய இந்திரனை அவனுடைய வாகனமாகிய

ஞராவதயானையோடு நீ ஒரு கையினுலே தூக்கியெறிந்து அவன் வீழ்ந்துகிடப்ப உதைத்ததாகக்கேட்டு நான் மகிழ்ந்திருந்தேன். அது பொய்! அந்த இந்திரனுடைய தூதனன்ருே என் கரத்தைத்துணித்தவன்? அடே சிங்கமுகா! உனக்கு என் கதி தெரியாதோ? அடே சூரபன்மனே! அவுணர்களுடைய வாழ்வே! நீ எங்கே போனுய்? நீ அண்டங்களனைத்தையும் ஆள்கின்ருய்! உன்னுடைய ஆக்ஞாசக்கரம் செல்லாத இடமில்லை! வானவர்களனைவரும் அவற்றிற்கு அஞ்சுவர்! அப்படியிருந்தும் உன் ஆளுகைக்குக்கீழ்ப்பட்டதான பொன்னுலகத்திலிருக்கும் வீரமாகாளனுக்கு உன்னிடம் அச்சமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. உன்னுடைய ஆக்ஞை பராக்கிரமசாலிகளிடம் செல்லமாட்டாது போலும்? தங்கை இவ்வாறு தவிக்க அண்ணன் அரசுசெய்வது நன்ருயிருக்கிறது. உனக்கு இது இழிவாகத்தோன்றவில்லையா? அந்தோ! என் கரம் போய்விட்டது. அங்கவீனமடைந்த பின் உயிரோடிருக்கவும் வேண்டுமா? என் மானமானது என் உயிரை வதைக்கின்றது. இதோ நான் சாகின்றேன். இப்படி என்விதியிருந்ததே! என்ன செய்வேன்! என்னையாரும் காப்பதற்கில்லையா? நான் அநாதையா? உடன்பிறந்தவர்களோடு பிறக்காதவளா? —என்று பலவாறு புலம்பியழுதுகொண்டே அத்தாணி மண்டபத்துக்குள் பிரவேசித்து அங்கே சிங்காதனத்திலே வீற்றிருக்கும் சூரபன்மனுடைய தாள்களிலே சிரந்தோய விழுந்து புரண்டாள்.

இப்பொழுது அம்மண்டபத்திலிருந்தாரனைவரும் "அந்தோ ஈதென் விபரீதம்!" என வியந்தவராய் பிர

மித்து விட்டனர். அநேக அவுணர்கள் "அந்தோ துக்கம்! துக்கம்! யார்செய்த திவ்வநீதம்? இப்பிழை செய்தவன் உய்வதெப்படி இனி? இந்தத்துன்பம் செய்தவன் அஞ்சா நெஞ்சினனாயிருக்க வேண்டும்" என்று பேசிக்கொண்டனர்.

சூரபன்மன், "தங்காய், உன்னை இப்படிக் கொடுமை செய்தவன்யாவன்? அவன் உன்னை இன்னானென்று நினைக்கவில்லைபோலிருக்கிறது. உன் கரத்தை வெட்டியதுமல்லாமல் இவள் கரத்தையும் வெட்டியிருக்கிறானே? அவன்யாவன்? இப்பொழுதே சொல். ஒருகணத்தில் அவனுயிரைநமனுலகுக்கனுப்புகிறேன்! யாரவன் சொல்?" என்று வினவினான்.

அசமுகி, "அண்ணா, நான் பூவுலகஞ் சென்றிருந்தேன். அங்கே ஓரிடத்தில் இந்திரனுடைய மனைவியாகிய அயிராணி தவம்புரிந்து கொண்டிருப்பதை நான் பார்த்தேன். அவளைக் கண்டதும் ஓடி உனக்கென்று அவளைப்பிடித்து எடுத்தேன். அப்பொழுது அவள் கூவிய கூச்சலைக்கேட்டு யாரோ ஒரு தேவன் இங்கிருந்து வந்தானென்பது தெரியாமல் திடீரென்று வந்து என்னை எதிர்த்து அமரிட்டுப் பின் என் கரத்தையும் இவள் கரத்தையும் வெட்டித் துண்டாக்கிவிட்டு அயிராணியை மீட்டுக்கொண்டுபோய் விட்டான். இதுதான் நடந்தது. தேவர்களெல்லாரும் தமக்கு அஞ்சி நடப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்களே! நடந்ததைக் கவனித்தீர்களா?" என்று கூறினாள்.

இதைக் கேட்டதும் சூரபன்மன் கடுஞ்சினங் கொண்டான். அவன்கண்கள் தீயைச் சொரிந்தன!

வாய் புகையைப் படலம் படலமாக உமிழ்ந்தது! மூக்கு தீயை நிகர்த்த மூச்சை விடுத்தது! வக்கிரமானபற்கள் அவனுடைய பெரிய உதடு முழுவதையும் மூடிக் கொண்டன! புகையை உமிழ்ந்த வாய், உடனே அண்டங்கள் வெடித்தன வென்னும்படி இடியோசையை எழுப்பியது! பயங்கரமான நகைப் புண்டாயது! உதடுகள் இரண்டும் படபட வென்று துடித்தன! புருவமிரண்டும் நிமிர்ந்து துள்ளின! பற்கள் கறகறவென்று ஓசையுண்டாம்படி கடிக்கலுற்றன. உடலெங்கும் வியர்வை உண்டாயது. உடனே மயிர்க்கால்களெங்கும் தீப்பொறிகள் வெளிவந்தன. அதனால் வியர்வை வறண்டது.

இவ்வாறு சூரபன்மன் கோபங் கொள்ளவே, திசைகளிலுள்ளவர்களெல்லாரும் நினைத்த பக்கங்களுக்கு ஓடுவாராயினர். முனிவர்களெல்லாம் உலைந்தனர். ஆடும் தெய்வகன்னிகையரும் அவனுடைய புகழைப் பாடுகின்றவர்களும் உள்ளம்பதைத்து ஓடினர். அஷ்டதிக்குயானைகளும் ஓடின. மகாமேருவும் குலைந்தது. தேவர்கள் எங்கிநின்றனர். பகலவனானவன் இந்தத்தீங்கை அஞ்சி ஓடி மீண்டுவந்து உலாவினான். பூமியும் நடுங்கியது. விண்ணும் நடுங்கியது. பிரமபதம் நடுங்கியது. விஷ்ணுபதம் நடுங்கியது. அசுரர்களுங் கூட நடுங்கினர்.

சிறிதும் கருணையில்லாத புன்மனத்தனாகிய சூரபன்மா என்கிற அவுணன் இத்திறஞ்சினங் கொண்டு அமரர்களை யெல்லாம் தொலைப்பேன் இக்கணமே என்று கருதி, தன் அருகில் வீற்றிருந்த தம்பிமார்

களைப் பார்த்து, " தம்பிமார்களே! என்ன சொல்வேன் நான்? நம்முடைய ஏவல் கேட்டதும் ஓடிப் போய் மீன் சுமந்துகொண்டுவந்துபோட்ட இந்திரன் தன்னுடைய ஏவலாள னொருவனைக் கொண்டு இவ்வாறு செய்திருக்கிறானென்றால், அற்பமானிடர்கள் நம்மை இனிக்கொல்லவும் துணிவார்களென்று நினைக்கிறேன். பரமனாகிய அந்த சிவபெருமானேயல்லன், பங்கயத்தயனேயல்லன், லக்ஷ்மிதேவி வசிக்கும் திருமார்புடைய அந்த மகாவிஷ்ணுவேயல்லன், அந்த வாசவன்றானல்லன், அவனுடைய ஏவலைச் செய்யும் ஒருவனும் இவர்களுடைய காத்தினைத் துணித்துவிட்டு உயிரோடிருப்பவன். போரிலே தேவர்களை வஸ்திரத்தினால் கட்டிக் கொண்டு வந்தும் அவர்களை, இதோ என் கண்களின் முன்னே நிற்கின்ற அவுணர்களுக்கு உணவாகக் கொடுத்திராமற்போனேன்! தருமத்தை யெண்ணி விட்டிருந்தேன்! மறைந்து வசிக்கின்ற இந்திரனையும் இந்திராணியையும் சிறியரென்றெண்ணி முன்னே சிறை வைக்காமல்விட்டு விட்டேன். தீயை முழுவதும் அழிக்காமல் மிச்சம்வைத்தவனுக்கொப்பானேன்! கையிலே அகப்பட்ட உயிர்ப்பலியை உடனே உண்ணாமல் தப்பவிட்ட ஒரு யானைக்கு நிகரானேன். இவர்களுடைய கைகளை வெட்டியது என்னுடம்பிற்கே செய்த ஊனமாகுமல்லது வேறல்ல. இந்திரனையும் இந்திராணியையும் தேடிக் கண்டுபிடிக்கும்படி நாம் தூதுவர்பலரை அனுப்பினோமல்லவா? அவர்கள் என்ன செய்கிறார்களோ தெரியவில்லை. தமக்கொரு தீங்குமின்றிப் பூவுலகில் வாழ்ந்து கொண்டு நமக்குத் தீங்கு செய்யும் அவர்களை இன்னும்

காணவில்லை பார்த்தீர்களா? தம்பிமார்களாகிய நீங்களி ருக்கின்றீர்கள்! புதல்வருமிருக்கின்றார்கள்! நிகரற்ற இந்திரஞாலத் தேருமிருக்கிறது. ஆக்ஞா சக்கரமும் இருக்கிறது! நானுமிங்கிருக்கின்றேன். பின்னை யாரி ருந்தாலென்ன? ஒன்றுமாவதில்லை. அந்தோ! என்ன சொல்வேன்! வானளாவி வளர்ந்துள்ள ஒரு பஞ்சு மலையானது ஒரு சிறு தீப்பொறிபட்டமாத்திரத்தில் அழியுஞ்செயல் போல், இவர்களுடைய கரங்களிலி ருந்து விழும் சிறு இரத்தத்துளியினால் பல அண்டங் களிலும் பரவி நின்ற நமது புகழ் போயிற்றே!" அந்தோ நம்மைச்சார்ந்த இவர்கள் இழிவடைவதா? தேவர்களிடத்திலிருந்துதுன்பம் இங்கேவருவதாமோ? இப்படிப்பட்ட பழிப்பு நமக்கெய்துவதாமோ? இந்தப் பழிப்பு என்றும் நீங்காததாயிற்றே! ஆகா என்னுயிர் இதனைப்பொருப்பதெப்படி? தேர், யானை, குதிரை, எண்ணிறந்த அவுணர்கள் ஆகிய நால்வகைப் படை யும் உலகெங்கும் நிறைந்திருக்க அசமுகிக்குஇந்தக் கேடுண்டாவதா? நான் செய்யும் அரசு நன்றாயிருக் கிறது! வெகு நன்றாயிருக்கின்றது!"—என்று கூறி நகைத்தான்.

இவ்வாறு சூரபன்மன் சினங்கொண்டு சிரித்ததும் அவனுடைய புதல்வனாகிய பானுகோபன் என்பவன், தீயெழுவதுபோல் கோபாவேசங் கொண்டெழுந்து சென்று தன் தந்தையின் முன்னே வணங்கி நின்று "தந்தையே, வாசவன் நம்முடைய குற்றேவலால் மிக வும் நொந்து இளைத்துப்போய் எங்கேயோ மறைந் தான். ஏனைய தேவர்கள் நமக்கஞ்சி நடக்கும் எளிய

வாராமையினால் அவர்கள் இந்தச் செய்கையைச் செய்யத் தமது சிந்தையிலும் நினைக்கமாட்டார்கள். இவர்கள் தங்கள் கரத்தை யிழந்தது எப்படியோ தெரியவில்லை! தேவர்களிலே ஒருவன் இவர்களுடைய கரத்தை வெட்டிவிட்டு உயிரோடுலாவுகிறான் என்று நீர் கூறுவது எப்படியிருக்கிறதென்றால், வந்தி பெற்ற மகனொருவன் வானிலிலகும் சந்திரனைக் கரத்தினால் பிடித்தான் என்பதை ஒத்திருக்கிறது. அவர்களே இவர்களுடைய கையைத் துணித்ததாக வைத்துக் கொள்வோம். அவர்கள் உமது கோபத்திற்குத் தகுதியுடையவர்களாவரோ? அவர்கள் உம்முடைய திருப்பெயர் கூறியவளவில் அஞ்சி யொடுங்கும் எளியவரேயன்றோ? கடலிலிருந்து மீனைச் சுமந்துவந்துபோட்டு நமக்குப் பணி செய்துகொண்டு கிடந்த அவர்கள் ஆண் மக்களாவார்களா? பேடிகளேயாவர்! பிரமன், விஷ்ணு, ருத்திரன் இவர்கள் மீது கோபங் கொண்டால் அது உமக்குப் பொருந்தும். மிகச்சிறியவர்களாகிய தேவர்கள் மீது தாம் கோபங்கொள்வதா? கோபத்தைத் தணித்துக்கொள்ளும். இவர்கள் கை வெட்டுண்ட இடத்திற்கு நான் போய், நமதாணைக்குச் சிறிதுமஞ்சாது இச்செய்கை செய்தவனையும் ஒளிந்து திரியும் இந்திரனையும் அவனுடைய மனைவியையும் இன்னும் அங்கேயிருக்கும் தேவர்களையும் பிடித்துக் கொண்டு விரைவில் மீள்கின்றேன். அவர்கள் அந்த இடத்திலே இராமல் எங்கேனும் ஒளிந்து கொள்வர்களானால், அவர்களுடைய உலகமாகிய ஸ்வர்க்கத்தைத் தீக்கிரையாக்குகின்றேன். தம்பியேனுக்கு விடைதந்தருள்வீர்!" என்று கேட்டான்.

சூரபன்மன் இவ்வாறு கூறிய தன் மைந்தனிடம் மகிழ்ச்சியடைந்து, " நீ போய் வா " என விடைதந் தான். பானுகோபன் தன் தந்தையின் தாள்பணிந்து அப்பால் சிற்றப்பன்மார்களின் தாள்களையும் பணிந்து விடைபெற்றுத் தன் மாளிகைக்குச் சென்றான்.

அப்பால் சூரபன்மன் ஏவலாளனை அழைத்து "நீ போய்ப் பிரமதேவனை இங்கே என் முன் அழைத்துக் கொண்டுவா இப்பொழுதே" என்று கட்டளையிட் டான். உடனே அவன் சென்று பிரமதேவனைத் தேடிக் கண்டு தங்கள் இறைவன் கட்டளையைக் கூறினான். பிரமதேவர் சிறிதுந் தாமதமல் பஞ்சாங்கத்தோடு சூர பன்மன் முன்னே போய்த் திதிவார நக்ஷத்திரங்களை யோதி யமர்ந்தார். சூரபன்மன், " சகல உயிர்களையும் படைத்த பிரமனே, இதோ இந்தக்கணத்திலே, வெட் டுண்ட இவர்களுடைய கரத்தை உண்டாக்கக் கடவாய்" என்றுக்ஞாபித்தான்.

பிரமதேவர் அஞ்சி யெழுந்து "அப்படியே" என்று கூறி இசைந்து, "இவர்களுடைய வெட்டுண்ட கரங்கள் முன்போலாகுக" என்றார். கூறியதும் அக் கரங்கள் வளர்ந்தன. அதுகண்டு சூரபன்மன் சந்தோஷ மடைந்து, " பிரமனே, உன்னுடைய வல்லமை நன்றா யிருக்கிறது " என்று புகழ்ந்துவியந்து அனுப்பிப் பின் அசமுகியை அழைத்து " நீ இங்கேயே நமது திரு நகரத்திற்குள்ளே வசித்துக் கொண்டிரு" என்று கூறித் துன்முகியைப் பார்த்து, " நீ பானுகோபனுடன் போய் அயிராணி இருக்குமிடத்தைக் காட்டிவிட் டுவா" என்று கட்டளையிட்டனுப்பினான். அதன்மேல் சில ஏவலரை அழைத்து, " நீங்கள் விரைவில் சூரி

யனையும் நக்ஷத்திரங்களையும் கிரகங்களையும் நம்முன் அழையுங்கள்" என்று பணித்தான்.

சூரபன்மனுடைய ஏவல் கேட்டுச் சென்ற ஏவலர் சூரியன் முதலிய யாவரையும் அழைத்துக்கொண்டு வந்து அவன் முன்னே நிறுத்தினர். சூரபன்மன், அவர்களைக் கோபத்தோடு நோக்கி, "ஆகாயவீதியிலே சஞ்சரிப்பவர்களாகிய உங்களுக்குத் தெரியாத தொன்றுண்டோ? அப்படி யிருக்க என் தங்கையினுடைய காத்தை எவனே ஒருவன் வெட்டியதை நீங்கள் அறியாமற் போனதேன்? யாரோ தேவனொருவன் இவள் காத்தைத் துணித்தானும். அவனுடைய உயிரை இன்னும் நீங்கள் கவராமலிருப்பதேன்? உயிரைக் கவராவிடினும் அவனை யேன் கட்டிப் பிடித்துத் தலைசெய்து இங்கே என்முன்னே கொண்டு வந்திருக்கக்கூடாது? இவ்வளவு செருக்கா உமக்கு? நல்லது. இந்தத்துஷ்டச் செய்கைக்கு நீங்களுடன்பட்டிருக்கிறீர்களென்று நான்தீர்மானிக்கிறேன். நம்முடைய ஆணைக்கடங்கி உங்கள் தொழிலைச் செய்யும் நீங்களே இப்படிச் செய்வதா? உங்களுக்கு இது முறையாகுமா?" என்று அதம்பினன்.

சூரியன், "மகாராஜனே, நாங்களொன்றையும் அறியோம். நாங்கள் எங்கள் செய்கையிலேயே கருத்தாயிருந்தோம். எங்கள்மீது சினங்கொள்ளவேண்டாம்" என்று கூறினன். அசுரன், "உன்னுடைய விடை அழகா யிருக்கிறது. நீங்கள் பார்க்க வில்லையா? நல்லது" என்று சினந்து அவர்களைச் சிறைச்சாலைக் கனுப்பினன். அப்பால் ஏவலாளரை விளித்து, "நீங்

கள் போய், "வாயுக்களைக் கொண்டு வாருங்கள்" என்றுகஞாபித்தான். அவர்கள் அக்கணமே மாயமாகப் பறந்து வாயுக்களை அழைத்துக்கொண்டுவந்துமுன்னே நிறுத்தினர். சூரன் அவர்களைக் கண்டதும் கண்களிலே கனற்பொறி பறக்கக்கோபங்கொண்டு "நீவிர் விண்ணிலும் மண்ணிலுமே யன்றித் திசைகளிலும் பாதாளத்திலும் நிறைந்திருக்கிறீர்; ஊனிலும் உயிரிலும் மற்றும் எல்லாப்பொருள்களிலும் நிறைந்திருக்கின்றீர்! அப்படிப்பட்ட உங்களையறியாமல் மறைந்துகொள்பவர் ஒருவருமில்லை. அவ்வாறிருந்தும் எங்களுக்குத் தீங்கிழைத்தவனைப்பற்றி எங்களிடம் தெரிவிக்காமல் இருந்துவிட்டீர்களன்றோ? 'நமது பகைவர்களாகிய அவுணர்களுக்கு இந்தக்கேடு சம்பவிப்பது நன்று' என்று கருதி வாளா விருந்தீர்போலும்! உமது சமர்த்து நன்றாயிருக்கிறது!"—என்று சொல்லிச் சிரமசைத்தான். அவர்கள் அவனுக் கஞ்சி ஒன்றும் பேசாதிருந்தனர். அவ்வாறு பயந்து நின்ற அவர்களையும் சிறைச்சாலைக்கு அனுப்பினான். அப்பால் சூரபன்மன் ஏவலரைப் பார்த்து "இப்பொழுதே, இவ்வருஷம், இருது, மாதம் முதலிய எல்லையாளரை இங்கே என்முன் கொண்டு வாருங்கள்" என்றனுப்பினன். ஏவலர் உடனே ஏகி எல்லையின் காவலராகிய கடவுளை அழைத்துக்கொண்டுவந்து சூரபன்மன் முன் நிறுத்தினர். சூரபன்மன் அவர்களைக் கடுங் கோபத்துடன் பார்த்து, "எப்போதும் நம்முடைய பணிசெய்வதிலேயே காலங்கழிப்பவர்களா யிருந்தும் உங்களால் பயனொன்றும் கண்டிலன். மகபதிசெய்த செய்கையைத் தகுவ தென்றெண்ணி நீங்களெல்லோரும் மன

மகிழ்ந்திருந்தீர் போலும். நல்லது உமது செயல்" என்று, கூறிச் சீறிச் சிறைசெய்வித்தான்.

அதன் மேல் சூரபன்மன் சில ஏவலாளரை யழைத்து, "நீங்கள் போய், புவியிலுள்ள வேந்தர்களை யெல்லாம் இங்கே அழைத்து வாருங்கள்" என்று தூண்டினான். அவ்வாறே ஏவலாளர் சென்று புவியிலுள்ள வேந்தர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு போய்த் தங்கள் அரசன் முன்னே நிறுத்தினார்கள். தேகத்தில் வியர்வை யெழவும் அச்சமும் நாணமும் உயிரைத் தாக்கவும் நெஞ்சமிகத் தளரவும் நின்று கைகூப்பி வணங்கும் புவி வேந்தர்களைக்கண்ட சூரன், சினங்கொண்டு, இந்திரன் நம்முடைய ஏவலை விட்டு நீங்கி ஒளிந்துகொண்டு இந்திராணியோடு இப்பூவுலகி லிருந்து மகிழ்கின்றான். அவன் வானுலகத்திலில்லை, என்னை வஞ்சித்தொழுகும் அவனுக்கு நீங்கள் இடந் தந்திருக்கின்றீர்கள்; அவனுடைய செயலைப்பற்றி எங்களுக்கு கூறுதிருக்கிறீர்கள்; அவன் செய்த செய்கை தெரியாதுபோலும் உங்களுக்கு? அவனு டைய ஆணையின்வழியில் நின்ற ஒரு தூதுவன் என் தங்கை அசமுகியினுடைய கரத்தை வெட்டியனுப்பி யிருக்கிறான். இப்படிப்பட்ட பழியையுண்டாக்கிய ஒருவன் உங்களூரில் வாழ நீங்கள் இடந்தந்திருக் கிறீர்கள். என்பகைவர்களாகிய அவர்களோடு நீங் கள் உறவாடுகிறீர்கள்போலும்! இல்லை, கள்ளையுண்டு களித்துத் திரிகிறீர்களோ? அரசியலை விட்டு விட்டீர் களோ? நீங்கள் இருந்த நிலைமைதான் என்னை?" என்று கேட்டான்.

அவ்வாசர்கள், "மகாராசனே, நீ கூறிய தன்மையில் நாங்களில்லை. எப்போதும் போல் அரசைப் பரிபாலித்துவருகிறோம். பகைவர்கள் ஒருவரையும் இது வரையில் காணவில்லையே; அவர்கள் மறைந்து வசிக்கும் கதையையும் கேட்டறியோம்: எங்கள் அன்னையை யொத்த அசமுகி துன்முகியோடு அங்கேவந்ததும் அவர்கள் பகைவரிடம் அகப்பட்டுக் கொண்டதும் எங்களுக்குத் தெரியாது. இது ஒரு மாயமாகும்" என்றனர்.

இதைக்கேட்டதும் சூரன், "மிகுந்த செல்வச் செருக்கினால் மயக்கமுற்றுப் பூவுலகத்தைச் சரியாய் பரிபாலியாத நீங்கள் என்னிடத்திலே வந்த இந்தப்பழியை மாயமென்று கூறுகிறீர்கள்! அழகா இருக்கிறது பேச்சு!" என்று வெகுண்டு நோக்கி எழுந்து நின்று தன் உடைவாளை யுருவிக் கையிற் பிடித்துக்கொண்டு, சிலருடைய நாவையும் கையையும் செதித்தான். சிலருடைய மூக்கையும் காதையும் களைந்தான். சிலபேருடைய மார்பையும் முதுகையும் பெயர்த்தெறிந்தான். சிலபேருடைய கால்களையும் தோள்களையும் தலையையும் அறுத்தான்.

சூரபன்மன் இவ்வாறு அவரவருக்குத்தக்க தண்டனைகளைச் செய்து பின் சிங்காதனத்தினின்று இறங்கித் தம்பிமார்களை நோக்கி "நீங்கள் போங்கள்" என்று விடைதந்து தானும் புறப்பட்டான். அப்பொழுது பிரமதேவர் எதிரே வர, "நீயும்போ" என்றான். பிரமதேவர், "வேந்தே, சூரிய சந்திரர்களும் நக்ஷத்திரங்களும் காலவரையறைத்தெய்வங்களும் எல்

லாரும் உம்முடைய ஏவல் வழி நிற்பர். உலகம் அவர்களில்லாமல் நடைபெறாது. அவர்களைச் சிறையினின்று விடுதலைசெய்யக்கடவீர்!'' என்று வேண்டிக்கொண்டார்.

சூரபன்மன், அதனைக்கேட்டு "நல்லது" என்று கூறி ஆசனத்தமர்ந்து, தூதரையனுப்பிச் சிறைச்சாலையிலிருந்து அவர்களை வரவழைத்து, "இப்போது உங்களைவிடுவிக்கிறேன். இனி என்றும் நீங்கள் நம்முடைய ஏவலின்வழி நிற்கவேண்டும். இந்திரனோடு சேருவது கூடாது. தெரிந்ததா? போங்கள்; போய் உங்களுடைய தொழில்களைக் கவனியுங்கள்" என்று கூறி அனுப்பினான். அப்பால் பிரமதேவர் சூரனிடம் விடைகொண்டு சென்றார். சூரபன்மனும் அந்தப்புரம் சென்றான்.

---



## அத்தியாயம் 8

முன்னே பானுகோபன் அசமுகியைத் தண்டித்தவனைக்கண்டு பிடிப்பதாகக் கூறித் தந்தையிடம் விடைகொண்டு தன்மாளிகை சென்றான் என்று கூறினோமல்லவா? அவன் தன்மாளிகை சென்றதும், அழகுபெறப் போர்க்கோலம் பூண்டு தும்பைமாலை சூடிக் கையிற் படைக்கலமேந்திக் கொண்டு மாளிகையை விட்டுப் புறப்பட்டு வெளியே வந்தான். வந்ததும் முன்னரே கொண்டுவந்துவைத்து நிறுத்தியிருந்த தேரின் மீது ஏறிக்கொண்டான். அப்பொழுது ஆயிரம் வெள்ளம் அவுணசேனைகளும் ஆயிரம் வெள்ளம் குதிரைகளும்

ஐந்நூறு வெள்ளம் யானைகளும் கடல் கொந்தளித்ததுபோன்ற பேரொலியுடன் பானுகோபனை வந்து சூழ்ந்தன. அளவிறந்த பதாகைகளும் குடைகளும் உயர்த்தப்பட்டன.

இவ்வாறு சேனைகள் சூழவே, தேவர்களுடைய நெஞ்சங்கள் தளர்வுற்றன. அவுண வீரர்களுடைய புயங்கள் பூரித்தன. யுத்தபேரிகைகள் முழங்கின. அப்போது உலகமுழுவதும் நடுங்கின. இந்த வைபவத்துடன் பானுகோபன் புறப்பட்டு மகேந்திரபுரிக்கப்பால் வந்து அதனைச் சூழ்ந்து நின்ற கடலாகிய அகழியைக் கடந்து இப்பால் பூமியினெல்லையையடைந்தான்.

அடைந்தவுடன் பானுகோபன் தன்னோடு வந்த துன்முகியைப் பார்த்து, "உங்களுடைய கைகள் எங்கே வெட்டுண்டன? அந்த இடத்தைச் சொல்லு" என்று கேட்டான். அசமுகி "இளவரசே, ஒரு வீரன் தனியே வந்து காங்களை வெட்டினன். அவனொரு சோலைக்குள்ளிருந்து வந்தான். அங்கே இந்திரன் மனைவியாகிய அயிராணியுமிருந்தாள். அந்த இடம் அதோ இருக்கிறது" என்று சீர்காழியைக் காட்டினள்.

பானுகோபன், "ஓ தெரிந்துகொண்டேன்" என்று கூறித் தன் சேனைகளுடன் அங்கே போனான். அவனுடைய படைகள் அந்தச் சோலையைத் துவைத்து த்வம்சம் செய்தன. பானுகோபன் அங்கே சென்று, அசமுகியின் காத்தை வெட்டிய வீரனையும் அயிராணியையும் தேடிப்பார்த்தான். அங்கே அவர்

களைக் காணுமல், பூவுலகமெங்கும் தேடிப்பார்த்தான் ; அவர்களைக் காணவில்லை. ஆதலால் அவன் கடுஞ் சின மடைந்து தன்னுடைய பெருஞ் சேனைகளுடன் ுலகம் போனன்.

பானுகோபன் இவ்வாறு வந்ததை அறிந்த தேவர்கள் பயந்து பதைபதைத்தோடி இந்திரனுடைய புதல்வனும் தங்கள் இளவரசனுமாகிய சயந்தனுக்குத் தெரிவித்தார்கள். சயந்தன், அச்செய்தி கேட்டதும் இடியோசை கேட்ட அரவம்போல் அலமந்து ஏங்கி நடுங்கி இன்னது செய்வதென்றுணராதவனாய்த் தன் முன் நிற்கும் தேவர்களைப்பார்த்து, " அந்தோ, நம்முடைய குருவுமில்லை. உங்களிலே அநேகர் இங்கில்லை. என்னுடைய அன்னையும் தந்தையுமில்லை. நான் மாத்திரம் தனியே உங்களுடன் இங்கிருக்கிறேன். நாம் அவுணர்களுக்கு என்ன தீங்கு செய்தோம்? இச்சமயத்தில் இந்தப் பானுகோபன் இவ்வாறு படை யெடுத்து வரக் காரணமென்ன? இன்னும் துன்பஞ் செய்யவா? ஆகா! இது வரையில் செய்த துன்பமும் இப்போது அவர்கள் நம்மை ஏவல் கொள்வதும் போதாவோ? இன்றைக்கு என்ன செய்யப்போகிறதோ தெரியவில்லையே! செல்வங்களழிந்தன. தாய் தந்தையர் ஒளிந்து கொண்டனர். உறவினர் ஒடுங்கினர். சகல பெருமைகளும் ஒழிந்தன. இனி இந்த நகரத்தில் இருக்கவும் இடமில்லை போலும்! என்ன செய்யலாம், தேவர்களே! நீங்களே ஏதேனும் சூழ்ச்சி சொல்லுங்கள் " என்று கேட்டான்.

தேவர்கள் ஒன்றும் விடை கூறாமல் அஞ்சி நின்றனர். சயந்தன், "அஞ்சாதீர்கள்! பூவுலகத்திலே மறைந்திருக்கும் என்னுடைய தாய் தந்தையரையும் உறவினரையும் அவுணர்கள் பலர் தேடுகிறார்கள். அவர்களிடம் அவர்கள் அகப்படவில்லை போலும். நாம் எங்கே ஒளிப்பது? நமக்குப் புகலிடம் எங்கே இருக்கிறது? இவர்களுக் கஞ்சி நடுங்கி ஓடி ஒளிவதனால் யாது பயன்? ஒன்றையும் கா( எப்படித் தாழ்ந்து போனாலும் இவர்கள் நம்மை வதைக்கானோம். சிறிதும் இரக்கமில்லாத பாவிகளாயிருக்கிறார்கள். வருவது வந்தே தீரும். வாராது போகுமோ? போகாது. ஆதலின், இனி நாம் இவர்களைப் புகழ்ந்துகொண்டும் வணங்கி ஏவல் புரிந்துகொண்டும் திரிவது கூடாது. இவர்களை எதிர்த்துப் போர் புரிந்து வெற்றி கொள்ளப் பார்ப்போம். இன்றேல் போரில் சாவோம். இவ்விரண்டிலும் நான் உறுதி கொண்டிருக்கிறேன். இனி நான் அஞ்சுவதில்லை இந்தப் பாபிகளுக்கு. உயிரைத் திரணமாக நினைப்பவன் எத்தகைய தீங்குகள் வந்தாலும் நடுக்கமடைவதில்லை. உயிரைப் பொருளாக மதிப்பவனே தனக்கு வரும் தீமை கண்டஞ்சி நடுங்கித் துன்பத்திலாழ்ந்து வீரஞ் சிதைந்து அழிகிறான். இதோ இப்போதே இந்தப் பானுகோபனுடைய சேனைகளை எதிர்க்கிறேன்; அவர்களிலே பல பேர்களைக் கொல்கிறேன். நீங்களும் என்னைத் தொடர்ந்து பாதுகாத்திருங்கள். அப்படிச் செய்ய அஞ்சுவீரானால் இப்போதே எங்கேனும் ஓடித் தப்பி உயிர் பிழையுங்கள். நீங்கள் எல்லோரும் என்னைத் தனியே விட்டுச் சென்றா

னுமன்றான இனி இந்த எண்ணத்தை மாற்றுவ!
என்ன சொல்கிறீர்கள் !" என்று கூறினான்.

இதைக் கேட்டதும் தேவர்கள், "இளவரசே, தம்முடைய எண்ணம் இப்படியானால் இதற்கு வேறாக நடக்க எங்கள் மனம் இடந்தருமா? கொடும் பாவிகளாகிய அசுரர்களுக்கஞ்சி அவர்களிட்ட பணியைச் செய்துகொண்டு உழன்று உடல் மெலிந்து சிறுமைப்படுவதை விட அவர்களோடு போரிட்டு அவர்களிற் சிலரையேனும் கொன்று மடிவது மேலன்றோ? நல்லது அவ்வாறே செய்வோம்" என்றனர்.

சயந்தன் இதைக் கேட்டதும் தேவர்களின் துணிவைக் கண்டு வியப்படைந்து, உடனே சிங்காசனத்திலிருந்திறங்கி ஐராவத யானையை நினைத்தான். அந்த யானை உடனே அவன் முன்னே வந்து நின்றது. சயந்தன் போர்க்கோலத்துடன் அதன் மேலேறிக் கொண்டு தேவர்கள் சூழப் புறப்பட்டுப் பானுகோபனுடைய சேனைகளை நோக்கிப் போனான்.

தேவர்களும் பெருங்கூட்டமாகக் கையிற்படைக்கலமேந்திக்கொண்டு சயந்தனைச் சூழ்ந்து சென்றனர். அந்த ஐராவதயானையின் பிளிற்றொலியும் தேவர்களுடைய ஆரவாரமும் யுத்தமுரசின் ஒலியும் ஒன்றாகச் சேர்ந்தபடியால், அந்தப் பொன்னுலகம் எனக்குத் தீங்கு வருமென்றஞ்சிப் புலம்புவது போலிருந்தது.

சயந்தன் ஒன்றையுங்கவனியாமல், தன்சேனைகளை ஆத்திரத்தோடு நடத்திக்கொண்டுபோய் பானுகோபனுடைய சேனையின் முன்னே போனான். தேவசைன்னியங்களைக்கண்ட அவுணர்கள், "நன்று!

நன்று!" என்று கைகொட்டி ஆர்ப்பரித்து, "நேற்று வரையில் நமக்குத் தொண்டு புரிந்துகொண்டிருந்த இவர்கள் இன்றைக்கு இவ்வாறு போருக்கெழுந்தது பெரிய அற்புதமாயிருக்கிறது. இவர்கள் நம்மை வென்று உயிர் தப்பவந்தவர்களல்லர்! போரில் மடியத் துணிந்தே வந்தார்கள். இது திண்ணம்" என்று கூறிப் போர்புரிய முன் வந்தார்கள்.

அப்பால் இருபக்கத்தவரும் ஒருவரை யொருவர் முட்டி உரப்பி வேற்படைகளையேவிப் போர் புரிந்தனர்! வாட்படைகளை வீசி வன்சமர்புரிந்தனர்; வில் வளைத்து அம்புகளை மாரியாகப்பெய்து அமர்புரிந்தனர். எழுப்படைகளையும் தண்டுகளையும் மழுப்படைகளையும் குலிசங்களையும் சூலப் படைகளையும் வீசியெறிந்து கடும்போர் புரிந்தார்கள். இரத்தம்பெருகி ஆறாக ஓடியது.

இவ்வாறு இருதிறத்தவரும் போர் புரிகையில் அவுணர்கள் பலகொடுமைகள் புரிந்து தேவர்களைத் துன்பப்படுத்தினர். தேவர்கள் அத்துன்பம்பொறுக்கமாட்டாமல் அஞ்சி ஓடினர். அவுணர்கள் ஓடும் அவர்களைத் தொடர்ந்து பிடித்துக் கொண்டுவந்து கீழேதள்ளிக் குத்திக் குமுக்கித் தங்கள் இளவரசனாகிய பானுகோபனுக்கு முன்னே கொண்டு போய் விட்டார்கள். பானுகோபன், "இவர்களை விடாதீர்கள்; காவலில் வையுங்கள்" என்றுகஞாபித்து "ஓ இவ்வளவுதுணிவா உங்கட்கு?" என்றார்ப்பினான்.

பானுகோபன் இவ்வாறு கூறியதைக் கேட்டு சயந்தன் வெகுண்டு வில்லைக் கரத்திலெடுத்து வளைத்து

நாணேசெய்து அசுரர்கள்மீது மாரியாகப் பாணங்களைப்பொழிந்தான். பொழியவே அவுணர்கள் பிரளயகால சமுத்திரம்போல் திரண்டுவந்து சயந்தன் ஏறியிருந்த ஐராவதத்தை வளைத்துக்கொண்டு நின்று பாணங்களைக் கோடிகோடியாகச் சொரிந்தார்கள். சயந்தன் அவர்கள் விட்டபாணங்களையெல்லாம் தன்னுடைய பாணங்களாலே தடுத்து அழித்து அவர்களுடைய வில்லையும் ஒடித்துச் சற்றுநேரத்திற்குள் நூறு வெள்ளஞ் சேனைகளை மாய்த்துவிட்டான். ஐராவதயானையானது பானுகோபனுடைய சேனைகளை வாலினால் அடித்தும் துதிக்கையினால் வாரியெறிந்தும் கால்களினால் மிதித்தும் கொம்புகளினால் குத்தியும் அநேகரைக் கொன்றது.

இவ்வாறு அவுணர்கள் அழிவதைக்கண்ட நீலகேசன் என்னும் சேனைத்தலைவன் முன்னேவந்து சயந்தனைவெகுண்டு நோக்கி, "அடே மேல்வருந் தன்மையை எண்ணிப்பாராமல், விளக்கில் விட்டிற் பறவையைப்போல் நீயேன் இவ்வாறு துள்ளுகின்றாய்?" என்று கூறி அம்புகளைச் சொரிந்தான். சயந்தன் அவன் விட்ட பாணங்களையெல்லாம் தன் பாணங்களால் தவிடுபொடியாக்கி அவன் கவசங்களையும் அறுத்தான். அப்பால் நீலகேசன் வியர்த்துப் பெருமூச்செறிந்து ஒரு பிறைமுகாஸ்திரத்தை விட்டான். அது சயந்தனுடைய வில் நாணை அறுத்தெறிந்தது. வில் நாண் அறுபடவே சயந்தன் முன்னமே தான் பயின்றிருந்த ஒரு மாயத்தையெண்ணி அதனால் பலவேறு உருவங்கொண்டு பலவகையாகப் போர் செய்தான்.

சயந்தன் மாயம் செய்கிறான் என்பதை நீலகேசன் தெரிந்து கொண்டான். தெரிந்து கொண்டானாயினும் அதனைவிலக்க முடியாதவனாய் மயங்கி யொடுங்கித் தொலைந்தான். சேனைத்தலைவன் தொலையவே சேனைகள் நாலாபக்கங்களிலும் சிதைந்தோடத் தலைபட்டன. அப்பால் சோமாசுரன், மாயாபலி, சூரகேசரி, பதுமன், மாருதபலி, தண்டகன், வாமன், வருணன், மாகதன் முதலாகிய அவுணப்படைத்தலைவர்கள், சயந்தன் செய்யும் மாயத்தைத் தங்கள் மாயத்தினால் விலக்கக் கருதிப் பெருமுயற்சி செய்தார்கள். அவர்கள் முயற்சி பயன்படாமற் போயிற்று. அதனால் அவர்கள் இனி நாம் என்னசெய்வதென் றெண்ணி யேங்கித் தவித்தனர்.

இவ்வாறு தன் படைத்தலைவர்கள் சோர்வுற்றதையும், சயந்தன் வெற்றிபெறுவதையும் கண்ட பானுகோபன் சற்று நேரம் ஆலோசித்தபடி நின்று, "ஓ சயந்தன் மாயவித்தையினால் வெல்கிறான்" என்று தெரிந்துகொண்டு, முன் சுக்கிராசாரியார் தனக்கு உபதேசித்த ஞானமந்திரத்தைச் சிந்தித்துக்கொண்டே அவன் முன் போனான். போனதும் சயந்தனுடைய மாயாரூபங்களெல்லாம் அழிந்தன. சயந்தன் "சுக்கிராசாரியார் இவனுக்கு உபதேசித்துள்ள மந்திரவன்மையே நமது மாயாரூபங்களை அழித்தன" என்று தெரிந்து கொண்டான். தெரிந்துகொண்டும் வெல்லும் வகையறியாமல் வாளாவிருந்தான்.

இச்சமயம் பானுகோபன், "சயந்தா, வா, உன் மாயாரூபங்கள் என்னுடைய மந்திரத்தின் முன் யாதாயின பார்த்தாயா? முன் சூரியனைச் சிறை செய்தது

போல் உன்னையும் இதோ சிறைசெய்யப்போகிறேன்'' என்றான்.

சயந்தன், "பலமுள்ளவர் வெல்வார்கள் என்பதும், பலமில்லாதவர்கள் தோற்பார்கள் என்பதுமில்லை. ஊழின்படியே யாவும் நடக்கும். அதன் முறையைச் சிவபெருமானே அறிவர். உன்னை நீ யேன் புகழ்ந்து கொள்கிறாய் வீணே? அது தகுமா?'' என்றான். சயந்தன் இதைக்கேட்டதும் பானுகோபன் நகைத்து, "இந்தப் பேச்சு பலமில்லாதவன் பேச்சன்றோ? அதனை நீயும் பேசினாய்! இது வீரனுக்ழகல்ல'' என்று கூறி வில்லை வளைத்து! "வா சண்டைக்கு'' என்றான்.

சயந்தனும் சினங்கொண்டு வில்லை வளைத்துப் போர்புரிய முன் வந்தான். பானுகோபன் அவன் மீது சடசடவென்று பாணங்களை எய்தான். சயந்தனும் பானுகோபன்மீது பாணங்களை மாரியாகப் பொழிந்தான். பின் இருவருக்கும் போர் வெகு கடுமையாய் நடந்தது. சயந்தன் வெகு சாமர்த்தியமாய்ப் பாணங்களைச் செலுத்தி பானுகோபனுடைய வில் நாணை அறுத்தான். அதனால் பானுகோபன் தீயைப் போற் சினந்தோடி வேறொருவில்லை யெடுத்துவளைத்து அதிற்பாணங்களைப்பூட்டி எய்து சயந்தன் விடும் பாணங்களையெல்லா மழித்து அவன் உடலின்மேல் ஆயிரம்பாணங்களை விட்டுத்துளைத்தான். சயந்தன் ஆயிரம் அம்புகளை ஒன்றன்பின்னொன்றாக எய்து பானுகோபனுடைய தேர்க்குதிரைகளை வீழ்த்தி அவனுடைய சேனைகளின் மீதும் பாணங்களை எய்தான். அது, இறந்துபோகிறவன் தன்னிடத்திலுள்ள பொருள்களை யாவர்க்கும் கொடுப்பதுபோ லிருந்தது.

தோழியவே பானுகோபன் சரேலென வேறொரு தேரின் மேலே பாய்ந்து வெகுண்டு பெருமூச் செறிந்து, இதழ் கடித்து இடியைப்போல் .உரப்பி வில்லை யெடுத்து வளைத்து மளமளவென்று கோடி கோடியாகப் பாணங்களை யெய்து சயந்தனுடைய உடலையும் அவன் வாகனமாகிய ஐராவதத்தினுடலையும் சல்லடைக் கண்களாகத் துளைத்தான்.

இவ்வாறு துளைக்கவே, சயந்தன் அப்பால் போர் புரிவதற் காற்றாதவனாய்த் தன் யானையின் மேல் சாய்ந்தான். ஆனால் அவன் இறக்கவில்லை ;' அமிர்த முண்டவனல்லவா? பார்த்தவர்களெல்லாம் "அந்தோ இவன் இனிப் பிழைப்பதரிது" என் றெண்ணும்படி அவன் தேகமெல்லாம் இரத்தம் பெருகி ஓடியது. அவனுள்ளே மூண்டு எரிந்து கொண் டிருந்த கோபாக்னியினால் அந்த இரத்தம் வறண்டது.

இதைக் கண்ட ஐராவத யானை, வெகுண்டு ஓடி பானுகோபனுடைய தேரின் மேலே பாய்ந்தது. பாயவே, குதிரைகளும் பாகனும் ஒழிந்தனர். அப் பால் பானுகோபன் கீழே குதித்து ஓடி ஐராவத யானை யைக் குத்தப்போனான். யானை பெருஞ் சினங் கொண்டு தன்னுடைய நான்கு கொம்புகளாலும் அவனுடைய மார்பிலே முட்டியது. முட்டவே அதனுடைய கொம்புகள் நான்கும் மலையின் மீது குத்துண்ட ஊசிகளைப்போல் ஒடிந்தன. அப்பால் பானுகோபன் அதனுடைய துதிக்கையை ஒரு கையினாலே பிடித்துக்கொண்டு அதன் கன்னத்தில் ஓங்கி ஓர் அறையறைந்தான். அறையவே அந்த ஐரா வதமானது பாற்கட லுடைந்ததென்று சொல்லும்

படி அரற்றி வீழ்ந்து அயர்ந்தது. சயந்தன் இப்போது தன்னுணர்வை யடைந்தமையினால், "'அந்தோ நாம் தனியனானோம். வலிமை குறைந்தது. இனிக்கொடிய வர்களாகிய அவுணர்கள் பிடித்துக் கொள்வார்கள். இந்தப்பொன்னுலகம் இனியழியும்' என்று நெஞ்சமே நீ சிறிதும் அஞ்சாதே. ஆராய்வோமானால் இப்படி நிகழ்வனவெல்லாம் விதியின் முறையேயாகும்" எனத் தன் மனதுக்குத் தேறுதல் கூறிக்கொண்டு வருவதை அனுபவிக்கச் சித்தமானான்.

சயந்தன் இவ்வாறு நிலையழிந்ததையும் ஐராவதம் தளர்ந்து கீழே விழுந்ததையும் கண்ட அவுணர்களனை வரும் பெருமகிழ்ச்சி கொண்டு ஆரவாரித்தனர்; "இவன் வஞ்சகன்! இவனை அடியுங்கள்! இவனைக் குத்தி அமுக்குங்கள்! இவனைக் கொல்லுங்கள்!" என்று கூறிக் குதூகலமடைந்து குதித்தார்கள்.

பானுகோபன், "இவனைத் தொந்தரை செய்யாதீர்கள். பகைவனென்று கருதாதீர்கள். இவன் நான் விட்ட பாணங்களினால் அடிபட்டுக் களைத்திருக்கிறானல்லவா? களைத்தவர்களைத் தொந்தரவு செய்வது வீரர்களுக்கழகல்ல. ஆதலின் இவனைக் கொண்டு போய்த் தேவர்களோடு சிறை செய்திடுங்கள்" என்று கூறினான். உடனே படை வீரர் திரண்டு வந்து சயந்தனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு போய் விட்டனர்.

அப்பால் பானுகோபன், தன் வீரர்களை நோக்கி; "இந்தத் தேவலோகம் அழியும்படி இப்பொழுதே அனலிட்டுக் கொளுத்துங்கள்" என்றான். அவர்கள்

உடனே தேவலோக முழுதும் நாலா பக்கங்களிலும் போய் அனலிட்டுக் கொளுத்தியதுமன்றி அப்போது ஓடி ஒளிந்த அரம்பையர்களை ஒருவர் விடாமற் பிடித்து வந்து பானுகோபன் முன்னே நிறுத்தினார்கள். முன்னே சிவபெருமானுடைய புன் முறுவலால் திரிபுரங்களும் ஒரு நொடிப் போதில் சாம்பலாயிற்றன்றோ? அவ்வாறே தேவலோக முழுதும் விரைவிலே எரிந்து கரிந்து பொடியாயிற்று.

கவனியுங்கள். நிகரற்ற போகங்களை அனுபவித்துக்கொண்டிருந்த இந்திரன் ஓடிப்போனான். அமரத்வம்பெற்றிருந்த தேவர்களெல்லாரும் அவுணர்களாகிய தம் பகைவரிடம் சிறைப்பட்டனர். ஊழிக்காலத்திலல்லாமல் மற்றைக் காலத்தில் அழிவை யடையாத ஸ்வர்க்க லோகம் இப்போது அழிந்தது. இதனைக் கவனிக்கும் யாவன், செல்வமும் வாழ்வும் நிலையாயிருப்பனவென்று கருதி இறுமாப்படைவான்? செல்வம் சகடக்காப் போன்றதென்றும் வாழ்வு நீரின்மேற் குமிழை யொத்ததென்றும் பெரியார் கூறி யிருப்பது இங்கே உய்த்துணரத்தக்கதாம்.

ஸ்வர்க்க லோகமும் அக்கினிக்கிரையாய் வானவரெல்லாம் தன்னிடம் சிறைப்பட்டதைக் கண்டு பானுகோபன் மகிழ்ந்து தன் படை வீரர்களை நோக்கி, “இந்திரனையும் இந்திராணியையும் காணோம். அவர்கள் எங்கே ஒளிந்துகொண்டிருக்கிறார்களோ தெரியவில்லை. இருக்கட்டும். நீங்கள் நம்மிடம் சிறைப்பட்டுள்ள தேவர்களையும் சயந்தனையும் முன்னே கொண்டு செல்லுங்கள். நான் பின்னே வருகிறேன்” என்று கட்டளை யிட்டான். அவர்கள் அவனுத்தர

வின்படி தேவர்களையும் சயந்தனையும் முன்னே மகேந்திரபுரிக்குக் கொண்டு போனார்கள்.

அப்பால் பானுகோபனும் மகேந்திரபுரி வந்து தன் தந்தையாகிய சூரபன்மனுக் கெதிரே போய் அவரை வணங்கி, "பூலோகத்திலும் ஸ்வர்க்க லோகத்திலும் தேடினேம். இந்திரனையும் காணேம். இந்திராணியையும் காணேம். எங்களை எதிர்த்து அமராடிய இந்திரன் மைந்தனைப் போரில் வென்று அவனையும் அவனைச்சார்ந்த தேவர்களையும் சிறை செய்துகொண்டு வந்தோம்; ஸ்வர்க்க லோகத்தைத் தீயிட்டுக் கொளுத்தி அழித்தொழித்தோம்" என்று கூறினன்.

சூரபன்மன் இச்செய்தி கேட்டு மனமகிழ்ந்து தன் மைந்தனை இறுகத்தழுவிக் கொண்டு தன் அருகே உட்கார வைத்துப் பின், ஏவலாளரை விளித்து, "நீங்கள் போய்த் தேவர்களில் ஒருவர் தவறுமல் எல்லோரையும் பிடித்து அவர்களுடைய கால்களையும் கரங்களையும் வெட்டி யெறியுங்கள். நம்முடைய அசமுகியின் கரங்களிலொன்றை அவர்கள் ஒருவன் துணித்தானல்லவா? இந்த என் தண்டனையை என் தங்கை அசமுகி கண்டு மகிழும்படி அவளுடைய கண்களின் முன்பு செய்யுங்கள்" என்றுணை யிட்டான்.

அவுணவீரர்கள் "அப்படியே செய்வோம்" என்றோடி, மான் கூட்டத்தின் மேல் புலிகள் வந்து பாய்ந்தது போல் தேவர்களைப் பிடித்துக்கொண்டு அவர்களுடைய கரங்களையும் கால்களையும் இரக்கமின்றித் துணித்தார்கள். தேவர்கள் தவமகிமை யுடையவராகையினுல் அவர்களுடைய கரங்களும் கால்களும்

வெட்ட வெட்ட வளர்ந்தன. இதை யறிந்த சூரன் "தேவர்களை நாம் கொல்வதற்காகாது. அவர்கள் வர பலமுடையவர்கள். அவர்கள் இப்படி நம்மிடம் சிறைப்பட்டதற்குக் காரணம், அவர்களுடைய தவத்திலும் நமது தவம் சிறிது அதிகமாயிருக்கவேண்டும். இன்றேல் அவர்கள் சிறைப்பட்டிருக்கமாட்டார்கள். இது எனக்கு நன்றாய்த் தெரிகிறது. ஆதலால் அவர்களை வேறு விதமாகத் தண்டித்தல் வேண்டும்" என்று சிந்தித்து அவுண வீரர்களை அழைத்து "நீங்கள் தேவர்களை யெல்லாம், எக்காலத்திலும் மீள்வதற்கில்லாத பெரிய நரகம் போன்ற சிறையில் இடுதிர்" என்றாணையிட்டான். அவர்கள் அவ்வாறே சயந்தனையும் தேவர்களையும் கொண்டு போய்ச் சிறையில் வைத்தனர். அதன் மேல் சூரபன்மன் தன் மைந்தனை அன்புற நோக்கி, "நீ உன் நகரஞ் சென்றிரு" என்று அவனை அனுப்பி விட்டுத் தானும் சபையை விட்டெழுந்து தன் மாளிகை சென்றான்.

தேவர்கள் சிறைச்சாலையிலே வருந்துவதுபோல் தெய்வப் பெண்களும், அவுணர்களிடம் அகப்பட்டு அவர்களுக்குக் குற்றேவல் புரிந்து பலவகையான கஷ்டங்களை அனுபவிக்கலாயினர்; தூக்கணம் குருவிகளினால் தங்கள் கூட்டிலே கொண்டு போய் வைக்கப்பட்ட மின்மினி அக் கூட்டை விட்டு நீங்கமுடியாமல் தவிப்பது போல் தவித்தார்கள்.

இவர்களிங்கே இப்படியிருக்கையில் தேவேந்திரனும் அவனுடன்சென்ற தேவர்களும் அயிராணியுடன் மேருமலையில் ஒருபக்கமிருந்து சிவபெருமானை நோக்கித் தவம்புரியலானார்கள். பானுகோபன் படையெ

டுத்துச்சென்று தேவலோகத்தை எரித்துத் தேவர்களை யும் சயந்தனையும் சிறைசெய்த செய்தி இந்திரனுக்குத் தெரிந்தது. இந்திரன் பொறுக்கமுடியாத துயரம டைந்தான்; ஆனால் முன்செய்த வினையின் அனுபவ மிவையெலாமென்று கருதிச் சிவபெருமானையே சர ணமாக அடைந்தான். அவன் நாடோறும் சிவபெரு மானைத் தரிசிக்கும் பொருட்டு அவர் திருக்கோவி லுக்குப்போவான். அப்பொழுது மாத்திரம் தன்சுய ரூபத்தோடு செல்வான். தேவர்களும அவ்வாறே செல்வார்கள். மற்றநேரங்களில் தங்களுடைய சுய வடிவங்களை மறைத்துழல்வர். இத்தன்மையினராகிய தேவர்கள் தாம் மறைந்திருக்கும் இடங்களிலே சூர பன்மனுடைய தூதர்களில் எவரையேனும் பார்த்து விட்டால் மனநடுக்கமுற்று உடலில் வியர்வையுண் டாக அயர்ந்து இறந்தவர்களைப் போற்கிடந்து அவர் மறைந்ததன் பின்னர் எழுந்திருப்பர். சில சமயம் அவர்கள் சூரபன்மனை நெஞ்சிலே நினைத்தாலும் சிங்க த்தைக்கனவிலே கண்ட யானையைப் போலாவார்கள். தேவர்களாகிய அவர்களுக்கு நித்திரை கிடையாது. ஆகையினால் அவர்கள் கனவுகாண்பதில்லை. சூரனைக் கனவிலே காண்பார்களானால் அவர்களைக் கொல்ல நமன்வேறு வேண்டுவதின்றாம்.

இவ்வாறு தேவர்களுக்குத் தீங்கு செய்து அவர் களைக் கெடுத்தும் சூரபன்மன் தான் அவர்கள் மீது கொண்ட பகையை மறக்கவில்லை; இன்னும் மேன் மேலும் இடையூறு செய்துகொண்டேயிருந்தான். அவன் ஓரண்டத்திலே செய்தன இவை யெல்லாம். மற்றைய அண்டங்களிலே அவன்செய்த தீங்குகள்

அளவிறந்தனவாகும். அவன் கட்டளையை மீறி நடப்பவர் ஒருவருமில்லாதிருந்தனர். அதனால் அவன் இறுமாப்பென்னும் ஒரு பெரிய மலையின்மேல் நிகரற்ற சூரியனைப்போல் விளங்கினான்.

---

## அத்தியாயம் 9

இத்தகைய பெருவளங்களைப் பெற்ற சூரபன்மனுடைய ஆற்றலை யடக்கச் சிவபெருமான் திருவுள்ளங் கொண்டார். அவர் உடனே, தம்மை நோக்கித் தவம் புரியும் இந்திராதி தேவர்களுக்குக் காட்சிதந்து, "யாம் உமாதேவியை மணந்து ஒரு குமாரனைத் தருவோம். அவன் சூரன் முதலாகிய அசுரர்களை வதஞ் செய்து உங்களுக்கு உங்கள் வாழ்வை யளிப்பான்" என்று வரம் தந்து மறைந்தருளினார். அப்பால் இந்திரன், மனமகிழ்ந்து சிவபெருமான் தாம் வாக்களித்தபடி திருக்குமாரனை அளிக்கும் நாளை யெதிர் பார்த்தவனாய் வெகுகாலம் காத்திருந்தான். காத்திருந்தும் சிவபெருமான் உமாதேவியை மணந்து கொள்ள எழுந்திராமல் யோகத்திலேயே யிருந்தமையினால் இந்திரன் பிரமவிஷ்ணுக்களோடு ஆலோசித்து மன்மதனை அவர்முன் அனுப்பிவைத்தான்.

மன்மதன் அவருடைய யோகநிலையைக் கலைக்க யத்தனித்தான். சிவபெருமான் அப்பொழுது தமது நெற்றிக்கண்ணைத் திறந்து அவனை எரித்துச் சாம்பராக்கினார்; பின் தேவர்களுடைய பிரார்த்தனைக் கிணங்கி, இமயமலையே இமவானுக்கு மகளாகவந்து

அவனிடம் வளர்ந்து தன்னை மணக்கத் தவம்புரிந்து கொண்டிருந்த உமாதேவியாரை மணஞ்செய்து கொண்டு கைலாசத்துக்கு எழுந்தருளினார். அப்பால் அவர் ஆறு திருமுகங்களுடனிருந்து அந்த ஆறு திருமுகங்களிலுள்ள ஆறு நெற்றிக்கண்களிலிருந்தும் ஆறு பொறிகளை உண்டாக்கினார். அந்தப் பொறிகளைச் சிவபெருமானுடைய ஆக்ஞையினால் வாயு தேவனும் அக்கினி தேவனும் கங்கையிலே கொண்டு போய்ச் சேர்த்தனர். கங்கை அவைகளைச் சரவணப் பொய்கையிலே சேர்த்தது. அப்பால் அந்த ஆறு பொறிகளும் ஆறுமுகப்பெருமானாக விளங்கின.

சிவபெருமானுடைய ஆறு நெற்றிக் கண்களிலும் ஆறுபொறிகள் தோன்றியபோது அஞ்சி யோடிய உமாதேவியின் திருவடிச்சிலம்பிலிருந்து நவரத்தினங்கள் சிதறிவிழுந்தன. அந்த ரத்தினங்கள் ஒன்பதிலும் சிவபெருமானுடைய திருக்கண்நோக்கத்தினால் ஒன்பது சக்திகள் தோன்றினர். அந்த ஒன்பது சக்திகளினுடைய வியர்வையினின்று ஒரு லக்ஷம் வீரர்கள் உதித்தனர். அப்பால் அவ்வொன்பதின்மரும் வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரராக்கதர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர் வீரதீரர்—என்னும் ஒன்பது வீரர்களைப்பயந்தனர்.

இவ்வாறு இவர்கள் அவதரித்தபின் உமாதேவியாரும் சிவபெருமானும் சரவணப்பொய்கை சென்று அங்கே ஆறு திருவுருவத்துடன் விளையாடிய புதல்வனைக் கண்டார்கள். சிவபெருமான் அந்தக் குழந்தைகளை யெடுத்துவரும்படி உமாதேவியாருக்குக்கட்டளையிட்டார். உமாதேவியார் அந்த ஆறு திருவுருவத்தை

யும் தமது இரண்டு கரங்களாலும் சேர்த்தெடுத்தணைத் துக்கொண்டார். அணைக்கவே, அந்த ஆறு திருவுருவ மும், ஆறு திருமுகமும் பன்னிரண்டு திருப்புயங்களுங் கொண்ட ஓருருவமாயிற்று. ஆகவே, சிவபெருமான் அக்குழந்தைக்குக் கந்தன் என்று திருநாமம் சூட்டி யருளினர். பின் அக்குமாரனை எமக்கும் உமாதேவி யாருக்கும் இடையே இடபவாகனத்தின்மீது ஏற்றி வைத்துக்கொண்டு கைலாசம் போய்த் தமது திருக் கோவிலிலிருந்தார்.

அங்கே பிரமாதிதேவர்கள் வந்து வணங்கிச் சூரபன்மனுடைய செயல்களைக்கூறிக் குறைநீக்கி யாதரிக்கவேண்டுமென்று முறையிட்டுக்கொண்டனர். சிவபெருமான் அவர்கள்மீது பெருங்கருணை கூர்ந்து " இனி உங்கள் கவற்சியை விடுங்கள் " என்று கூறி அங்கெழுந்தருளியிருந்த அறுமுகக்கடவுளை நோக்கி, ' சூரபன்மன் என்பவன் எம்மிடங்கொண்ட வரபலத் தினல் இறுமாப்படைந்து உலகத்திலுள்ள உயிர்களுக் கெல்லாம் துன்பஞ்செய்கிருன்; தேவருலகத்தை அழித்துவிட்டான்; தேவேந்திரனுடைய மைந்தன் சயந்தனைச் சிறைசெய்துவிட்டான். அந்தக் கொடிய வனை அவன் கிளைகளோடுங்கொன்று தேவர்க ளுடைய துன்பத்தை நீக்கி இந்திரனுக்கு அவனரசை யளித்து மீள்வாயாக " என்றுகூறி, அப்பொழுதே ஒரு வேலாயுதத்தை உண்டாக்கி அதனையும் கந்தப் பெருமானிடம் கொடுத்தார். அந்த வேலாயுதத்தை ஏவினல் அது ஐந்து பெரும் பூதங்களையும் அழிக்கும். யாவர் மேல் பாயினும் அவர்களின் வன்மையையும் வரன்களையும் கெடுத்து அவர்களுயிரை உண்ணும்.

அப்பால் சிவபெருமான் முன்பே தோன்றியிருந்த இலக்ஷம் வீரர்களையும் அழைத்துக் குமாரக் கடவுளுக்குத் துணை புரியும்படி கட்டளையிட்டார். அதன் பின் இரண்டாயிரம் வெள்ளம் பூதங்களோடு சண்முகனுக்குச் சேனாதிபதியா யிருக்கும்படி கணநாதர்களுக்குக் கட்டளை யிட்டனுப்பினார்; ஐந்து பெரும் பூதங்களின் வன்மையையும் பிரமாதி தேவர்களுடைய வன்மையையும் அங்குள்ள பொருள்களின் வன்மையையும் ஒருங்கு கொண்டதும் மனத்தினும் விரைந்து செல்வதுமாகியே ஒரு தேரை யுண்டாக்கி முருகக் கடவுளுக்குக் கொடுத்தருளினார்.

இவ்வாறு போர் செய்தற்குரிய சாதனங்களனைத்தும் பெற்ற கந்தப்பெருமான், சிவ பெருமானிடமும் உமா தேவியாரிடமும் விடை கொண்டு தமது சேனைகளோடு சூரபன் மனுடைய வலியை அடக்கி உலகத்துக்கு நன்மை யுண்டாக்குமாறு திருவுளங் கொண்டு புறப்பட்டுச் சென்றார்.

செல்லும் வழியில், முன், அகத்திய முனிவருடைய சாபம் பெற்ற கிரௌஞ்சம் என்னும் மாய மலை யிருந்தது. அந்த மலையின் மீது ஒரு பக்கம் சூரபன்மனுடைய தம்பி தாரகனிருந்து வந்தான். இந்த மலையைக் கண்டதும் முருகக் கடவுள் தமது சேனை வீரர்களை ஏவினார். அவர்கள் போய் தாரகனைக் கண்டு பிடித்து அவனோடு போர் செய்தனர். தாரகன் அளவிறந்த மாயைகளின் வன்மையினால் அவர்களெல்லோரையும் மயக்கித் தானிருந்த மலையில் எங்கேயோ கொண்டு போய் ஒடுக்கி விட்டான்.

முருகக் கடவுள் அது கண்டு தமது திருக் கரத்தி லுள்ள வேலாயுதத்தை நோக்கி "நீ தாரகாசுரனையும் கிரவுஞ்ச மலையையும் ஓரிறைப்பொழுது செல்லு முன் பிளந்து உள்ளுபிருண்டு புறத்தே சென்று இலக்கத் தொன்பது வீரர்களையும் பூத சேனாதிபதிகளையும் மீட்டு வரக்கடவாய்" என்று பணித்தார். அந்த வேலாயுதம் கிரௌஞ்சகிரியும் தாரகனும் செய்த மாயைகளை யெல் லாம் ஒரு நொடிப் பொழுதில் அழித்தது. அப்பால் அது தன்னை அஞ்சாமல் எதிர்த்த தாரகனுடைய மார் பாகிய வைரமலையின்மீது பாய்ந்து அதனைக் கிழித்துக் கொண்டோடி கிரௌஞ்ச மலையிலே ஊடுருவிச் சென்று. விரைந்து மீண்டது. வேலாயுதம் தன் மார்பை ஊடறுத்துச் செல்லவே தாரகன் துள்ளிக் குதித்துப் பூமியில் விழுந்து உயிர் துறந்தான். கிரௌஞ்சத்திலே மயங்கிக்கிடந்த இலக்கத்தொன் பது வீரர்களும் பூதங்களும் மயக்கம் நீக்கப் பெற்றுப் பெரு மகிழ்ச்சியுடன் எழுந்து வந்து சண்முகப் பெருமானை யடைந்தனர். பின் முருகக் கடவுள் தம்முடைய சேனைகளுடன் புறப்பட்டு இமய மலையைக் கடந்து தென்றிசையிலே நடந்து தேவ கிரியை அடைந்து, தேவர்களுடைய வேண்டுகோ ளுக்கிணங்கி அங்கே திருக்கோயில் கொண்டரு ளினார்.

முருகப் பெருமான் தாரகனைக் கொன்ற செய்தி சூரபன்மனுக்குத் தெரிந்தது. சூரபன்மன் அச் செய்தி கேட்டதும் நன்று நன்று என்று இடி போல் நகைத்து, "இச் செய்கை செய்தவன் சிவ குமாரனென்று கூறுகிறீர்கள்? இது பொய் வார்த்

தை !" என்றான். தாரகனுடைய மைந்தன் "சிவ குமாரனே இச் செய்கையைச் செய்தவன்" என்று உறுதியாய்க் கூறினான். சூரபன்மன் உடனே கண் களினின்று தீப் பொறிகள் பறக்க நாசியினின்று புகை வெளிப்பட சரீரத்து ரோமங்கள் பொறியைச் சிந்த நெறித்த புருவ மிரண்டும் நெற்றிமேலேறப் பற்கள் உதரத்தைக் கவ்வ உதடுகள் துடிக்கப் பெருங் கோபங் கொண்டான். அப்பொழுது அவன் மனம் ககன முகட்டையும் இடிக்க நினைத்தது. பின் தாரகன் மீது தொடரும் அன்பினாலே சூரனிடத்துச் சேர்ந்த துன்பக் கடல் அந்தக் கோபாக்கினியின் ஆற்றலை அவித்தது.

அப்பால் சூரபன்மன் சிறிது நேரத்துக்கெல்லாம் மீண்டு மந்தக் கோபத்தை யடைந்து தன் ஏவலாளரை நோக்கி, "என் தம்பியைக் கொன்ற கந்தனை நான் சென்று பொருது வென்று வரல் வேண்டும். என்னு டைய தேரையும் படைக் கலங்களையும் கவசத்தையும் ஒரு நொடிப் போதிலே கொண்டு வாருங்கள்" என, ஏவலாளர் அவ்வாறே கொண்டு வந்தனர்.

இது கண்ட அமைச்சர்களில் ஒருவனாகிய அமோகன் பல நியாயங்கள் கூறி, "எதிரியினுடைய பலத்தைத் தூதர் மூலமாக அறிந்து கொள்ளாமல் போருக்கெழுவது யுத்த முறையன்று" என்று தடுத் தான். தடுக்கவே சூரன் கோபந்தணிந்து தூதர்களை வரவழைத்து, "நீவிர் விரைந்து சென்று பூமியில் வந் துள்ள கந்தனுடைய இயல்பையும் அவனுடைய படைஞர்களாகிய பூதர்களுடைய தொகையையும் பிறவளத்தையும் ஆராய்ந்து அறிந்து கொண்டு இங்கே

வருவீர்களாக" என்று பணித்தனுப்பி விட்டு அசுரர்கள் துதிக்க அரியாசனத் தமர்ந்து அரசுபுரிந்தான். தேவகிரியிலிருந்த குமாரக் கடவுள் அங்கிருந்து புறப்பட்டுப் பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருச்செந்தூருக்கு வந்து திருக்கோயில் கொண்டருளினர்.

---

## அத்தியாயம் 10

### (மகேந்திர காண்டம்)

திருச் செந்தூரிலே கோயில் கொண்டெழுந்தருளிய முருகப்பெருமான், "கொடியவரை அழித்தல் நீதி நான் முறை. தரும நெறியும் அதுவேயாம். ஆயினும் சூரனையும் அவன் சுற்றத்தாரையும் திடீரென்று போய்க் கொல்வதை விட, தேவர்களைச் சிறை நீக்கி உய்யும்படி புத்தி சொல்வதற்காக ஓர் ஒற்றனை அவனிடம் அனுப்புவோம். அவன் நல்லவழிக்கு வாராவிட்டால் பின்னர் நாம் அவனைக் கொல்வோம்" என்று கருதி அரிபிரமேந்திராதி தேவர்களுடனிருந்து ஆலோசித்தார். அவர்களும் தூதனுப்புவதே முறையென்று தெரிவித்தனர். அப்பால் முருகப்பெருமான் வீரபாகு தேவர் என்பவரை அனுப்பினர்.

வீரபாகு தேவர் முருகப் பெருமானுடைய திருவடி மலரைச் சிந்தித்து,

"ஆவதோர் காலை யெந்தை யாறிரு தடந்தோள் வாழ்க
மூவிரு வதனம் வாழ்க முழுதருள் விழிகள் வாழ்க
தூவுடை நெடு வேல் வாழ்க தோல் படை பிறவும் வாழ்க
தேவர்க டேவன் சேயோன் திருவடி வாழ்க வாழ்க."

என்று துதித்துக் கந்தமாதன மலையின் மேல் நின்று மகேந்திரபுரி செல்வதற்கு வேண்டிய திருவுருவந்தாங்கி ஆகாயத்திலெழுந்து சென்று கடல் கடந்து வீரமகேந்திரத்தின் வடக்கிலுள்ள இலங்கை நகரமடைந்தார். அங்கே யாளிமுகன் என்பவனிருந்து அதனைக் காவல் புரிந்து வந்தான். வீரபாகு தேவர் அங்கே சென்ற இச் சமயம் யாளிமுகன் சூரபன்மனைக் காண மகேந்திரபுரி சென்றிருந்தான். அவனுடைய மைந்தன் அதிவீரன் என்பவன் அங்கே யிருந்தான். அவனுடைய சேனைத்தலைவனாகிய வீரசிங்கன் என்பவன் வடக்கு வாயிலுக்குக் காவலாயிருந்தான். அவன வீரபாகு தேவரை எதிர்த்து வழி மறித்தான். வீரபாகு தேவர், அவனோடு பொருது அவனைத் தன் வாளினால் வெட்டிக் கடலில் வீழ்த்தி அழித்தார். அவர் குதூகலத்தோடு குதித்தபடியால் அவ்விலங்கையும் குலை குலைந்து அவுணர்களோடு கடலில் ஆழ்ந்தது. அது கண்டு அதிவீரன் சினங்கொண்டு வீரவாகு தேவரை எதிர்த்தான். வீரவாகு தேவர் அவனோடு கடும் போர் புரிந்து அவனையும் வதைத்துப் பின் இலங்கையின் எல்லையை நீங்கி ஆகாய வழிக் கொண்டு மகேந்திரபுரிக்குச் சென்றார். இலங்கை மீண்டும் முன் போல் எழுந்தது.

இவ்வாறு இலங்கையை விட்டுச் சென்ற வீரவாகு தேவர் மகேந்திரபுரியை யடைந்து தெற்கு வாயிலைக் கிட்டுகையில் அங்கே ஆகாயத்திலிருந்து காவல் புரிந்து கொண்டிருந்த கயமுகன் என்பவன் அவரை வழி மறித்து நின்று போர் புரிந்தான். வீரவாகு தேவர் அவனுடன் நெடுஞ்சமர் புரிந்து முடிவில்

அவனையும் கொன்று அந்நகரத்துக் கிழக்கு வாயி லுக்குப் போய் அணுவுருக்கொண்டு அவ்வாயில் கோபு ரத்தின்மீதிருந்து அந்நகர வளங்களை யெல்லாம் பார்த் துத் தெரிந்து கொண்டு மகிழ் வெய்தினர். அப்பால் சூரபன்மனுடைய கோயிலையும் பானுகோபனுடைய கோயிலையும் அதன்பின் ஹிரணியன் அக்கினிமுகன் இவர்களையும் பார்த்துக்கொண்டே சென்று சயந் தனும் தேவர்களும் அடைபட்டு வருந்தும் சிறைக் களத்தை நாடிப்பார்த்து, "பேய் தான் கண்ட செல் வத்தைக் காப்பது போல் கீழோர்களாகிய அவுணர் கள் தேவர்களைச் சிறைச்சாலையிலே வைத்துக் காவல் காக்கின்றனர். இந்த அவுணர்கள் என்னைக் காணு தவாறு அறிவு கெட்டு மயங்கவும் சயந்தன் முதலிய தேவர்கள் என்னைக் காணவும் நான் இந்தச் சிறைக் களத்திலே சென்று சயந்தனைக் கண்டு தேறுதல் கூறு கிறேன்" என்றெண்ணி ஒரு திருமந்திரம் உச்சரித்துக் கொண்டு சிறைக்களம் புகுந்து சயந்தனையும் ஏனைய தேவர்களையுங் கண்டு குமாரப் பெருமான் அவர்களைத் ஆட்கொண்டு காப்பாற்ற முன் வந்திருப்பதையும் தாம் அவருடைய தூதாய் வந்திருப்பதையும் தெரி வித்து அவர்களைத் தேற்றிப் பின், ஆகாய வழிக் கொண்டு சென்று சூரபன்மனுடைய அவைக்கள மடைந்தார்.

அங்கே சூரபன்மன் அத்தாணி மண்டபத்தில் இரத்தின சிங்காதனத்தின் மீது அரசிருக்கும் சிறப்பைக் கண்ணுற்று, "சிவபெருமானுக் கடிமையாய் வழிபாடு செய்த தேவர்களுக்குள்ளே சூரபன்மனைப்போல் இவ் வாறு மகத்தான செல்வங்களைப் பெற்றவர் எவருமே

இல்லை ; இவனுக்கு வரங்களைக் கொடுத்தது போல் சிவபெருமான் வேறெவருக்கும் வரங்களைக் கொடுத்த தில்லை !" என்று வியந்து பின் " அந்தோ தேவர்களைச் சிறையில் வைத்துத் துன்புறுத்தும் பாபம் இவனை மாய்க்குமே !" என்று மன வருத்தமு மடைந்தார்.

அப்பால் அவர் ஆகாய வழிக்கொண்டு சென்று சூரபன்மனுடைய அவைக்களத்தில் யாவரும் காணும் படி தம்முடைய சுய ரூபத்தைக் காட்டி, " சிவபெரு மானுடைய திருக்குமாரராகிய சுப்ரமண்யக் கடவுள் அனுப்ப வந்த தூதுவன் யான் " என்று கூறினார் ; கூறிய அக்கணமே, " இவனுக்கு முன் இவனுக்குக் கீழே நானிருப்பது எம்பெருமானாகிய முருகக் கட வுளின் பெருமைக்குக் குறைவாகும் " என்றெண்ணி முருகக் கடவுளைத் தியானித்தார்.

தியானித்தவளவில் அழகிய இரத்தின சிங்காசன மொன்று அவ்வவைக்களத்திலே விளங்கியது. வீர பாகு தேவர் முருகப் பெருமானை வணங்கி அச் சிங்கா தனத்தில் அமர்ந்தார். வீரவாகு அவ்வாறு அமர்ந்த ருளியதும் அவ் வவையிலிருந்தார் யாவரும், " இவன் யாவனோ தெரியவில்லை ? பெரிய வீரன் போலிருக் கிறது. இன்றேல் இவ்வாறு இவ் வவைக்களத்திலே வீற்றிருக்கத் துணிவு கொள்வானோ ?" என்றுச் சரியப் பட்டனர் ; திடீரெனச் சிங்காதனமொன்று அங்கு வந்ததையும் எண்ணிவியந்தனர். சூரபன்மனும் இவை களைக் கண்டு வியந்து பிரமித்தான். பின் தெளிவுற்று பற்களை நெற நெறவெனக் கறித்து கறுவி நகைத்து உரப்பி உடலிலே வியர்வையெழ, கண்கள் தீப்பொறி களைச் சொரிய புகையை யுமிழ்ந்து வீரபாகுவை

நோக்கி, "தங்களுடைய உறவினரை விட்டுப் பிரிந்து இலைகளை யுண்டு மிருகங்களைப்போல் காட்டிலே திரிந்து உடலை வருத்தும் சிறிய உணர்வுடையவர்களின் சித்து வித்தை இது: அட பையலே, நீயும் அதனைக் கற்று வந்தாய் போலும். இந்த வித்தை யோகிகளுக்கும் தெரியும். தேவர்களுக்கும் தெரியும். இது வரையில் அவர்களுளொருவரும் இந்த வித்தையைத் துணிவாய் நம்மிடம் காட்டியதில்லை. நீ நமக்கு முன்னே காட்டிய இந்த நடனம் நன்றாயிருக்கிறது. அடே உன்னைப் பித்தனென்றே நான் மதிக்கிறேன். அட பேதாய், நீ செய்த இந்த ஆடலை இந்த என் நகரத்திலுள்ள பெண் களும் செய்வர். கருவிலிருக்கும் சிசுவும் செய்யும். விலங்குகளும் உணர்வில்லாத மலைகளும் செய்யும். நீ செய்த இந்தச் செய்கைக்கு உன்னை இப்பொழுதே வாட்படை கொண்டு துணிப்பேன். என் வெட்ட வில்லை தெரியுமா ? உன்னுடைய செயல் முழுவதும் தெரிந்து கொண்டு பின்பு அதைச் செய்கிறேன். நீ யார் ? எங்கே வந்தாய் ?" என்று கேட்டான்.

வீரபாகுதேவர், "மாயங்களைச் செயதுழலும் பேதையல்ல நான்! பிரமா இந்திரன் முதலியவர்க ளுடைய குறையை நீக்கித் தேவர்களைச் சிறையி னின்று விடுவித்து உலகத்துயிர்களுக்கு நல்வாழ்வை யளிக்கும்பொருட்டுத் திருச்செந்தூரின்கண் வந்து திருக்கோயில்கொண்டிருக்கும் முருகக்கடவுளனுப்ப வந்த தூதுவன் நான். என் பெயர் வீரபாகு" என்றார்.

சூரபன்மன், "அப்படியா! அந்த முருகக் கடவுள் உன்னை இங்கே தூதாக அனுப்பியதேன்"

என்று கேட்டான். வீரபாகு, "நீ சயந்தனையும் தேவர்களையும் சிறைசெய்திருக்கிறாயல்லவா? அது பெரிய அநீதி! தருமமல்ல. இழிதொழில். இந்திரனையும் பிரமாதிதேவர்களையும் துன்பப்படுத்துகிறாய்! இவ்வாறு செய்வது உனக்கு அழிவைத்தரும். ஆதலால் தேவர்களையும் சயந்தனையும் சிறையினின்று விடுவித்துத் தருமவழியில் நட. இதனைச் செய்யா தொழிவாயானால், முருகப்பெருமான் இங்கே வந்து உன்னை உன் கிளையோடு சங்கரிப்பார். இது திண்ணம். இவைகளை உனக்குச் சொல்வதற்காகவே முருகப்பெருமான் என்னை உன்னிடம் தூதனுப்பினார்" என்றார்.

இதைக்கேட்டதும் சூரபன்மன் பெருங்கோபமடைந்து கண்களில் கனற்பொறி பரக்க விழித்துப் பார்த்துக் கரங்கொட்டி நகைத்து, "ஆயிரத்தெட்டண்டங்களையும் வென்று ஏகசக்ராதிபதியாய் விளங்கும் எனக்குப் பான்மணமாறாத ஒரு பாலனா புத்தி சொல்ல வந்தான்! நன்றாயிருக்கிறது! தேவர்கள் நம்மவர்களாகிய அவுணர் குலத்தை வருத்தி அவர்க்கு வறுமையை யுண்டாக்கியபடியால் நாம் அவர்களை வருத்துகிறோம். தேவர்களைப் பகைவரா யெண்ணி அவர்களை வருத்துவது எங்கள் முன்னோருடைய வழக்கமேயல்லாமல் நான் மாத்திரம் புதிதாய்ச் செய்ததன்று. கடல் பொங்கி யெழுந்து உலகங்களெங்கும் பெருகினாலும் நான் தேவர்களைச் சிறையினின்று விடுவிக்கமாட்டேன்; என்னுடைய அண்டத்தினுச்சியிலோரிடத்திலே கொண்டுபோய் வைப்பேன். நான் சிவபெருமானிடம் வச்சிரயாக்கையையும் வேறு பல

வரங்களையும் பெற்றவனல்லவா? அப்படிப்பட்ட என்னுடன் கடும்போர் புரிந்து என்னை வெல்லவல்லவர் யாவர்? என்னுடைய தம்பியாகிய தாரகனைக்கொன்ற அந்தச் சிறுபாலன்மீது போருக்குவர எண்ணினேன். என் அமைச்சர்கள், 'சிறுபாலனோடு போர்புரிதல் பழுது' எனக்கூறி என்னைத் தடுத்துவிட்டார்கள். இவ்வளவுதூரம் துணிந்துவிட்டபடியால் இனி அவனை நான் பாலகனென்று விடப்போவதில்லை. அந்தச் சிறுபாலகனுடைய திறமையை நாளையதினம் காண்கிறேன். நான் தேவர்களை விடப்போவதில்லை. போய்ச் சொல்லிவிடு. சிறுபையனுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு தூதுவந்தனையே! உன்னுடைய பேதைமதிக்கு இரங்குகிறேன். நீ போ! உனக்கு உயிர் தந்தேன்" என்றான்.

இதைக்கேட்டதும் வீரபாகு தேவர் சினங்கொண்டு, சூரபன்மனை நோக்கி, "நீ உய்யுந் தன்மையை உனக்குச் சொன்னேன். அதனை உணராமல் சிவபெருமானுடைய திருக்குமாரனை பாலனென்று இகழ்கின்றாய்! அவருடைய பெருமையறியாமற் பேசும், உன் பேதை மதிக்கு இரங்குகின்றேன்" என்று கூறி முருகப்பெருமானுடைய பெருமைகளை விரிவாய்த் தெரிவித்தார்.

சூரபன்மன், அவைகளொன்றையும் கொள்ளாமல், "இவ்விடத்தைவிட்டுப் போகும்படி சொல்லியும் நீ போகாமல் இன்னும் அவனுடைய பெருமையைப் பேசுகின்றாய்! உன்னுடைய பெருமையையும் பேசி மகிழ்கின்றாய்! நான் கொண்டுள்ள கோபத்தை எண்ணவில்லை நீ! அந்தப் பாலகன் கடவுளாயிருந்தா

லென்ன ? பல வண்டங்களையும் வென்ற நான் அவ னுக்கஞ்சுவேனே? எனக்கு எதிரிலிருந்து கொஞ்சமும் அஞ்சாமல் இறுமாப்பான பேச்சுகளைப் பேசிய உன்னை எளிதில் விடுவது கூடாது" என்று கூறி அருகிலிருக்கும் ஏவலாளரை யழைத்து, "தூதுவந்த வனைக் கொல்வது கூடாது. ஆதலின் இவனைப் பிடித் துச் சிறையிடுகிர்" என்றான். உடனே அவுண வீரர் களில் ஆயிரம் பேரெழுந்து வீரவாகுவைப் பிடிக்கச் சூழ்ந்துகொண்டார்கள். வீரவாகு அவர்களெல்லா ருடைய குடுமிகளையும் ஒரு காத்திலேலே பிடித்து அந்த அவைக்களத்திலேயே அடித்துக் கொன்று விட்டு அவ்விடத்தை விட்டுச் சென்றார். அவருக்காக வந்த திவ்ய சிங்காதனமும் அக்கணமே மறைந்தது.

இவ்வாறு வீரவாகு தம்முடைய திறத்தைக் காட் டவே சூரபன்மன் வெகுண்டு, வெகுண்டு சதமுகன் என்பவனை யழைத்து, வீரவாகு தேவரைப் பிடித் துக் கட்டிக்கொண்டு வரும்படி ஏவினான். அவன் பெருஞ் சேனையோடும் பலவகையான படைக்கலங்க ளோடும் புறப்பட்டுப்போய் வீரவாகுவை எதிர்த் தான். வீரவாகு அவனோடு அமராடி அவனையும் அவன் சேனைகளையும் கொன்று விசுவரூபங்கொண்டு நின்றார். அவரைத் தாங்கமுடியாமல் மகேந்திரபுரி நடுக்கமுற்றது. அது சூரபன்மனுடைய ஆணையினால் கடலில் ஆழாதிருந்தது. அப்பால், சூரபன்மனுடைய கோயிலைக் காவல்செய்யும் காவல்ாளர் ஒன்றுகூடி வீர பாகுவை யெதிர்த்தனர். வீரபாகுதேவர் அவர்களனை வரையும் நசுக்கியும் துவைத்தும் தகர்த்தும் உதைத் தும் உருட்டியும் கொன்று அழித்து அந்நகரத்தையும் பாழாக்கினார்.

அதன்மேல் சூரபன்மனுடைய ஏவலால், நஞ்சு போலும் உடம்பையும் வடவாமுகாக்கினிபோல் குடுமியையும் சுடுகாடுபோலும் வாயினையும் ஐந்நூறு தலைகளையும் பற்பல படைகளேந்திய ஆயிரங் கரங்களையும் அண்டம்போன்றகன்ற வயிற்றினையும் உடைய சகத்திர வாகுகர் (ஆயிரம் புயங்களையுடையவர்) இடியேறுபோல் ஆர்த்தெழுந்துவந்து வீரபாகுவை எதிர்த்தனர். அவர்களை வீரபாகு வதஞ்செய்துவிட்டு வீர கர்ஜனை கர்ச்சித்தார். அப்பால் அவர் தம்மை எதிர்த்த வச்சிரவாகு என்னும் சூரபன்மனுடைய இளைய குமாரனையும் வதஞ்செய்தார். அதன்பின் யாளிமுகன் என்பவன் வந்தான். அவனையும் வதஞ்செய்து அந்நகரத்திலிருந்து பெருமகிழ்ச்சியோடு புறப்பட்டுக் கடலைத் தாண்டி திருச்செந்தூர் வந்து முருகப்பெருமானை வணங்கி நடந்தவை யனைத்தையும் விளங்கவுரைத்தார். அப்பால் முருகப்பெருமான் சூரபன்மனோடு போருக்குச் செல்லத் தீர்மானித்தார்.

மகேந்திரபுரி அழியவே சூரபன்மன் வேறு அண்டத்துப் பிரமதேவரை யழைத்து "அழிந்த இந்த நகரை முன்போல் அமைக்கக்கடவாய்?" என்று ஆக்ஞையிட்டான். பிரமதேவர், சூரனுடைய ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு மகேந்திரபுரியை முன்போலவே அமைத்திட்டான். சூரபன்மன் அதுகண்டு மகிழ்ந்து முன்போலவே சிங்காதனத்தமர்ந்து தன் மந்திரிகளை வரவழைத்துச் சபைகூட்டி. முருகப்பெருமானோடு யுத்தம் புரிவதைப்பற்றி ஆலோசனை செய்தான். அவர்கள் சிறுபாலகனைப் பொருட்படுத்தி யுத்தஞ்செய்வது உமக்கழகல்லவென்று கூறினார்கள்.

சூரபன்மனுடைய பிள்ளைகளெவ்வொருவரும், யுத்த ஆவேசங்கொண்டவர்களாய்த் தந்தையின் கட்டளையை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். ஆனால் சூரபன்மனுடைய தம்பியாகிய சிங்கமுகாசுரன், சுப்ரமண்யக்கடவுள் ஆற்றலை யெடுத்து விவரமாகக் கூறி அவரோடு போர்புரியத் துணிதல் மதியன்று என்று தன்னாலியன்றவரையில் கூறிப் பார்த்தான். சூரபன்மன் அவனை இகழ்ந்து வெறுத்துத் தன் மனம்போன போக்கிலேயே நின்றான்.

---

## அத்தியாயம் 11
### (யுத்தகாண்டம்)

சூரபன்மன் இங்கிப்படி யிருக்கையில் முருகப் பெருமான் தமது பெருஞ்சேனையோடு திருச்செந்தூரி லிருந்து புறப்பட்டு மகேந்திரபுரிக்குப் போனார். அவ் வூரை நெருங்கியதும் அதனுட் பிரவேசியாமல் அவ்வூரினெல்லைக் கப்புறத்திலேயே தேவதச்சனைக் கொண்டு ஒருபாடி வீடு அமைத்துக்கொண்டு அதிலே தங்கினார்.

இவ்வாறு சுப்ரமண்யக்கடவுள் வந்திருப்பதை நாரதர் சூரபன்மனுக்குக் கூறினார். சூரபன்மன் உடனே அடங்காத சினங்கொண்டு ஆர்ப்பரித்து சமுத்திரராஜனை வரவழைத்து, ' "வருணனே! சிவ பெருமானுடைய குமாரனையும் பூதப்படைகளையும் நமக்கு மாறாக நீ இங்கே விடுத்ததேன்?" என்று கேட்டான். அவன், "மகாராசனே, சிவகுமாரன் பிரமவிஷ்ணுவுடனும் தேவேந்திரனுடனும் ஆகாய வழியே சென்றனர். பூதகணங்களே என்மீது

போயினர். அவர்களுடைய கால் பாடுவரையிலும் நான் அமைந்திலேன்! என்னசெய்வேன். இப்படி முடிந்ததுயாவும்" என்று கூறி வணங்கிச் சென்றான்.

அப்பால் சூரபன்மன், "சிவகுமாரனுடைய வன்மையையும் பூதர்களுடைய வன்மையையும் தூதுவனுடைய வன்மையையும் இப்பொழுதே அழிப்பேன்" என்று அதம்பியவனுப் பானுகோபனை வரவழைத்து முதலில் அவனை முருகப்பெருமானுடன் போர்புரிதற் கனுப்பினன். பானுகோபன் முருகப்பெருமானுடைய சேனைவீரர்களை யெதிர்த்து நெடுஞ்சமர்புரிந்து முடிவில் முனைந்து நிற்க இயலாமல் புறங்கொடுத்தோடித் தன் மாளிகையை அடைந்தான்.

அதன்பின் சூரபன்மனே அமர்புரிய வந்தான். இருபக்கத்துச் சைன்யங்களுக்குள்ளும் முதலிற் போர் மூண்டது. இருபக்கத்திலும் அளவிறந்த பேர் மாண்டனர். அப்பால் அதிசூரன் என்பவன் போருக்கு வந்து உக்கிரர் என்பவரோடு நெடுநேரம் கடுஞ்சமர்புரிந்து உயிர் துறந்தான். அதன்பின் தாரகனுடைய குமாரன் அசுரேந்திரன் அமர்புரிய வந்து பூதர்களோடு போர்புரிந்து அநேக பூதர்களை முறியடித்தான். அதுகண்டு வீரபாகுதேவர் அவனை எதிர்த்து அமர்புரிந்து வதஞ்செய்தார்.

இப்படி இரண்டு குமாரர்கள் மாண்டுபோகவே சூரபன்மன், வடவாமுகாக்கினி உலகங்களையெல்லாம் எரிக்க எழுந்த தோற்றம்போல் பெருங்கோபங் கொண்டு, "இதோ பகைவர்களை விரைந்து கொல்கின்றேன்" என்று கூறி யெழுந்து தேரிலேறியமர்ந்து வில்லை வளைத்து நகத்தால் நாணோசை செய்தான்.

பூதகணங்கள் அதனைக்கேட்டலும் வலியும் வீரமு மிழந்து உடலும் சிரசும் நடுங்க எங்கும் சிதறுண்டோ டினர், சிலர் வீழ்ந்தனர் ; சிலர் பதைத்து மரம்போல் நின்றுவிட்டனர் ; சிலர் இறந்தனர் ; சிலர் மயங்கினர். அந்த நாதோசை அப்பால் பன்னிரண்டு வருஷ காலம்வரையில் எங்கும் கேட்டுக்கொண்டிருந்தது. அப்பால் அவன் தன்னை எதிர்த்த பூதப்படைகளை அடக்கத் தொடங்கி அநேகரை ஒழித்தான். அதன் மேல் லக்ஷம் வீரரும் ஒன்று சேர்ந்துவந்து சூர பன்மனை எதிர்த்துச் சமர்செய்தனர். சூரபன்மன் அவர்களெல்லாரையும் பாணங்களினாலே அடித்துச் சிதைத்துக், கீழேவிழும்படி செய்தான்.

பின்னர் வீரபாகு முதலிய ஒன்பது வீரரும் சூரபன்மனை எதிர்த்தமராடிக் களைத்தனர். இவ்வா றாகவே முருகப்பெருமானே நேரில் அவனோடு போர் புரிய வந்தார். அநந்தகோடி சூரியர்கள் திரண்டு ஒன்றாகிப் பூமியிலுள்ள இருளையோட்டி ஆகாயத்தை நீங்கிப் போர்க்களத்திலே வந்ததுபோல், முருகப் பெருமான் அமர்க்களத்திலே தோன்றிய தோற்றத் தைக்கண்டான். செந்தாமரை மலரையொத்த ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கண்களும் ஆறு கிரீடங்களும் அவைகளிலே விளங்காநின்ற படைக் கலங்களும் தண்டையும் சிலம்பும் ஒலிக்கும் திவ்ய சரணாரவிந்தங்களும் தரிசிக்கும்படியான பாக்கியம் செய்திருந்த சூரபன்மனைப் பொல்லாத பாவியென்று யார் சொல்வார்கள்? அறியாதவரே கூறுவர்.

இவ்வாறு சரவணபவனுடைய தரிசனங்கண்ட சூரபன்மன், முருகப்பெருமானை நோக்கி, 'ஏ பாலக,

நீயோ என்னோடு போர்புரிபவன்? என்னுடைய வரத்தினியல்பை நினைத்திலை! என்னுடைய அழிவில்லாத ஆக்கத்தை நினைத்திலை! என்னுடைய ஆண்மையையும் வெற்றிப்பிரதாபத்தையும் நினைத்திலை நீ. இதோ உன்னை ஒரு நொடிப்போதில் என்னுடைய வில்லினால் அழிப்பேன்" என்றுரைத்தான். முருகப்பெருமான், "வீண் அகந்தை கொள்ளாதே! உன்னுடைய ஆற்றலை யாம் ஒரு நொடியில் மாற்றுவோம்" என்றார். இதைக்கேட்டதும் சூரபன்மன், "நன்று நன்று!" என நகைத்துப் பெரிய வில்லையெடுத்து வளைத்துப் போர்புரியத் துணிந்தான். முருகப்பெருமானும் நீண்ட வில்லையெடுத்து வளைத்துப் போர்புரிய முன் வந்தார்.

அப்பால் இருவரும் இத்தன்மையதென்று எடுத்துக்கூற இயலாதவாறு கடும்போர் புரிந்தனர். ஒரு முகூர்த்தத்தில் சூரபன்மனுடைய சேனைகளெல்லாம் முருகப்பெருமான் அழித்து அதமாக்கிவிட்டார். பின் சூரபன்மன் ஒரு தனியனானான். அதனால் அவன் வெகுண்டு, "ஓ இந்தப் பாலகன், வலி நன்று நன்று" என்று நகைத்துப் பிரமாஸ்திரத்தை யெடுத்து முருகப்பெருமான்மீது விட்டான். அதனை இறைவனுடைய வேற்படை விழுங்கிவிட்டது. அப்பால் சூரன் விஷ்ணுப்படையை விட்டான். அதனையும் பன்னிரு கையனுடைய வேலாயுதம் விழுங்கியது. அதன்பின் சூரன் சிவப்படைக்கலத்தை விட்டான். அப்படையைக் குமாரக்கடவுள் தன் கரத்திலேந்தி நின்றார். சூரபன்மன் இதுகண்டு மகிழ்ந்து, "இந்த வீரனே

என்னோடு பொருதற்கேற்றவன். இவனோடு பொரு தற்கு யானே ஏற்றவன். இன்னும் இவனுடைய போர்த் திறங்காண்பேன். இவன் என்னுடைய அழி யாத வரபலத்தை எப்படி யழிக்கமாட்டுவான்?" என்று கருதிப் பற்பல மாயமந்திரத்தைப் பிரயோகிக் கத் தீர்மானித்து அவ்விடத்தைவிட்டு மறைந்தான்.

இதன்மேல் பானுகோபன் பெரும்படையோடு வந்து சுப்ரமண்யக் கடவுளை யெதிர்த்து நெடுஞ் சமர் புரிந்து முடிவில் புறங்கொடுத்தோடினான். அப்பால், சூரபன்மன் "இனி யாரையும் நான் போருக்கனுப் பேன். நானே போய் அமர் புரிந்து வெற்றிகொள் வேன்" என்று கூறி பூவுலகத்துள்ள படைகளையும் வரவழைத்துப் பெருந்துணைகளைச் சேர்த்துக்கொண்டு போய், முருகப்பெருமானை யெதிர்த்தான். இருதிறத் தாருக்கும் போர் மூண்டது. போரில் சூரபன்மன் ஆயிரம் ஆயிரமாகப் பாணங்களை விட்டுத் தன் எதிரி களினுடைய தேர்களை அழித்து விற்களை யொடித்து அவர்களை அதஞ் செய்தான். வீரபாகு முதலிய வீரர்கள் களைதெளிந்தெழுந்து சூரபன்மனுடைய நக ரத்திற் புகுந்து அதனைத் தீயிட்டு எரித்து அழிந்தனர். சூரபன்மன் உடனே மேகங்களை ஏவிப் பெருமழை பொழியச் செய்து அந்தத் தீயை அவித்தான். வீர பாகு, அக்கினிப் படையைத் தூண்டி அந்த மேகங் கள் பொழிந்த மழையை ஒழித்தார்.

இவ்வாறாகவே, சூரபன்மனுடைய மகன் இரண் யன் போர் புரிய வந்து தோல்வி யடைந்தோடினான். அப்பால் அவனுக்குப் பிறகு அக்கினி முகாசுரன்,

அவனுக்குப் பின் பானுகோபன், அவனுக்குப் பின் சூரபன்மனுடைய தம்பி சிங்கமுகாசுரன் முதலியவர்கள் போருக்கு வந்து மடிந்தனர். கடைசியாகச் சூரபன்மன் எதிரிகள் கண்டஞ்சத்தக்க பெருஞ் சேனைகளுடன் போருக்கு வந்தான். அது கண்ட இந்திரன், இந்தச் சேனைகளோடு போர் செய்து வெல்ல ஊழிகாலம் செல்லும்! அப்படியானால் சூரபன்மன் அழிவதெங்ஙனம்? அவுணர்களாகிய இராக்காலம் விடிவதும் தேவர்களுடைய சிறை நீக்கமாகிய சூரியோதயமாவதும் இல்லை போலும்!" என்றெண்ணியயர்ந்தான்.

இவ்வாறு வந்த சூரபன்மனை, முருகக் கடவுள் பார்த்துப் புன்முறுவல் செய்து தமது கரத்து வில்லை நாணொலி செய்து அவுணர்களுடைய கதியைக் கலக்கினார். சூரபன்மன் அவர் முன்போய் நின்று பாலகனே, "நான் இறக்கமாட்டேன். சிவபெருமான் அருளிய வர பலமுண்டெனக்கு. இது உனக்குத் தெரியாது போலிருக்கிறது. தேவர்களுடைய பேச்சை நம்பி இங்கே வந்தாய் போலும். உன்னுடைய பிள்ளைமைப் புத்தியை என்னென்று கூறுவது!" என்றான். முருகப்பெருமான், "அந்தப் பேச்செல்லாம் ஏன் பேச வேண்டும். வாய் பேசாமல் சண்டைக்கு நில்" என்று கூறினார்.

சூரபன்மன் கோபங் கொண்டு சுப்ரமண்யக் கடவுள் மீது மாரியாகப் பாணங்களைப் பொழிந்து சண்டை செய்தான். சுப்ரமண்யக் கடவுளும் அவன் மீது அமோகமாகப் பாணங்களைப் பொழிந்தார். அவன்

அவர் விட்ட பாணங்களை யெல்லாம் அழித்து அவருடைய தேரிற் கட்டிய கொடியை யறுத்து வெற்றிச் சங்கை வாயில் வைத்து ஊதிச் சிறிதுந் தாமதியாமல் பின்னும் பாணங்களைச் செலுத்தி அவருடைய திருமேனி முழுவதையும் மறைத்தான். அவர் அசசரங்களை யெல்லாம் தம்முடைய சாங்களினாலே அழித்து அவனுடைய தேர்க் கொடியையும் அறுத்தார்.

இவ்வாறாகவே சுப்ரமண்யக் கடவுளுடைய தேரின் மீது அக்னி பகவான் கோழிக் கொடியாயிருந்து அண்டம் வெடிபடக் கூவினான். அதைக்கேட்டதும சூரபன்மன் "நிகரற்றவனாகிய எனக்கஞ்சிக்காடுகளிலே கரந்துறைந்த தேவர்கள் இப்போது இந்தக் குமரனுடைய துணையைப் பெற்றுத் துள்ளுகிறார்கள். இவர்களுடைய நிலையை யழித்துச் சிவகுமாரனை வெல்கிறேன்" என்று ஆகாயத்திலெழும்பி நின்று பாணங்களை மழையாகப் பொழிந்தான். உடனே முருகப் பெருமானும ஆகாயத்தில் அவனுக்கு நேராக எழும்பி நின்று அவனோடு அமர் புரியலானார் இருவரும் ஒருவர் விட்ட பாணங்களை ஒருவர் அழிப்பதும் ஆகாயத்தை மறைப்பதுமாய்க் கடும் போர புரிந்தனர். சூரபன்மன் நெருப்பு மழைகள் போல் பாணங்களைச் சொரிந்து அவற்றினிடையிடையே மழு, வச்சிரம், முத்தலைச் சூலம், கப்பணம், குலிசம, வேல் முதலியவைகள் ஒவ்வொன்றிலும கோடி கோடியாக வீசினான். முருகப்பெருமான் அவைகளையெல்லாம் தமது பாணங்களினாலழித் தொழித்து அவனுடைய தேரினையும் உடைத்தெறிந்தார். அப்பால் அவன் இந்திர ஞாலத்

தேரை நினைத்து வரவழைத்து அதனமேலிருந்து போர் புரியத் தொடங்கி அநேக மாயங்களைச் செய்தான்; அநேக அண்டங்கடோறுஞ் சென்று சென்று வெளிப் பட்டு அங்கங்கே போர் செய்து நின்று பின்னும் மறைந்து சென்றான். முருகப் பெருமான் அவனை விடாது தொடர்ந்து சென்று அமராடி அவனுடைய சேனைகளையெல்லாம் அழித்து அவனைத் தனியாக்கி னார். அப்பால் அவன் தாயை நினைந்தான். அவள் வந்து, "பெரும் புறக்கடலில் அமுத சஞ்சீவி மந்திர கூடம் என்றொரு மலையிருக்கிறது. அந்த மலையைக் கொண்டு வந்தால், இறந்து போன யாவரும் உயிர் பெற்றெழுவர்" என்று கூறிச்சென்றாள். சூரபன்மன், அந்த மலையைக் கொண்டு வருவதற்கு இந்திர ஞாலத் தேரையனுப்பினான். அந்தத் தேர் மனோவேகத்தினும் விரைவாய்ச் சென்று அந்த மலையைக்கொண்டு வந்தது. அந்த மலைக் காற்று பட்டதும் போரில் இதுவரை யில் மடிந்து போன யாவரும் உயிர் பெற்றெழுந்த னர். சதுரங்க சேனைகளும் உயிர் பெற்றெழுந்தன.

அப்பால் சூரபன்மன் மகிழ்ந்து, தன் தாயைப் புகழ்ந்து மகாதீர்த்திர தசையிலிருந்தவனொருவன் இந்திர பதவியை யடைந்ததற் கொப்பப் பெருமித மடைந்தான். அவனுடைய சிரசு ஓங்கியது; புயங் கள் உயர்ந்தன; உடம்பு பருத்தது; உரோமங்கள் சிலிர்த்தன. இதைத் தெரிந்த தேவர்களனைவரும் பற வைகளின் உருவங்கொண்டு ஓடி மறைந்தனர்.

இவ்வாறாகவே முருகப்பெருமான், சகல உயிர் களையும் சங்கரிக்கின்ற உருத்திர பாசுபதப் படைக்

கலத்தை ஏவினர். அந்தப் படை, உயிர்த்தெழுந்த அவுணர்களை யெல்லாம் சங்கரித்து இந்திர ஞாலத் தேரிலிருந்த சுதாமந்திர பர்வதத்தையும் பொடிபட அழித்து ஆறுமுகப் பெருமானிடம் மீண்டது. இப் பொழுது சூரபன்மன் முன்போல் எல்லோரையும் இழந்து தனியனானன். இதனாற் கோபங்கொண்ட சூரபமன், "இந்தப் பாலகனைச் சேர்ந்த பூத சேனை களையும் வீரர்களையும் கவர்ந்து கொண்டு போய் அண் டத்தினுச்சியிலேவைத்துக் கொண்டிரு" என்று இந்திர ஞாலத்தேருக்குக் கட்டளை யிட்டான். அது அவ்வாறே முருகப்பெருமானுடைய சேனைகளை யெல்லாம் அண்டத்தினுச்சிக்குக் கொண்டு போய் விட்டது. இதைக் கண்ட முருகப்பெருமான் இந்திர ஞாலத்தேரைத் தன் பால் கொண்டு வரும்படி ஓரம் பெய்தார். அந்த அம்பு கணப்பொழுதிலோடி இந்திர ஞாலத்தேரைக் கொண்டு வந்து குமரப் பெருமான் ஸந்நிதியிலே சேர்த்தது. அதிலிருநத வீரர்களும் பூதர்களும் அதினின்று குதித்து முருகப்பெருமானை வணங்கி நின்றனர். அதன் மேல் முருகப்பெருமான் இந்திர ஞாலத்தேரைச் சூரபன்மனிடம் போகவிடா மல் தடுத்துத் தன் பக்கமே வைத்துக்கொண்டார்.

அப்பால் சூரபன்மன் சக்ரவாகப் பறவையின் உருவங்கொண்டு, ஆகாயத்திலெழுந்து சிறகுகளினு லடித்தும் மூக்கினுல் குத்தியும் சமர் புரிந்து பூதப் படைகளைச் சின்ன பின்னப் படுத்தினுன். இப் பொழுது இந்திரன் மயிலுருவங் கொண்டு பகவான் முன்னே வந்தான். இறைவன் அதன் மேலேறிக் கொண்டு, சக்கிரவாகப் பறவையாய்த் திரிந்த சூரனைத்

தூரத்தியடித்தார். வெகு நேரம் சண்டை நடந்தது. அப்பால் முருகப் பெருமான் வாட் படையை வீசி அந்தப் பறவையை இருதுண்டாக்கினார். துண்டாகியதும் சூரன், அண்ட முகடு வரையில் உயர்ந்து பூமியின் வடிவை யெடுத்து வாயுக்களியங்கும் வழியை மாற்றித் திசைகளை மூடி நின்றான். முருகப் பெருமான் ஏழு பாணங்களை விட்டு அந்த உருவத்தை யழித்தார். அப்பால் அவன் ஜலத்தின் வடிவானான். முருகப் பெருமான், ஊழித்தீயின் வடிவான பாணங்களை யெய்து அதனை வற்றவடித்தார். அதன்பின் தீயின் வடிவமானான். முருகப் பெருமான், பிரசண்ட மாருதக் கணைகள் தூவி அதனை அவித்தார். அப்பால் அவன் வாயுவினுருக்கொண்டான். முருகப்பெருமான் பாம்புகளினுருக் கொண்டு சென்று அந்த வாயுவை அழிக்கும்படி இலக்ஷம் பாணங்களை ஏககாலத்திலே எய்தார்.

இவ்வாறு தன்னுடைய மாயங்களையெல்லாம் முருகப் பெருமான் அழிப்பதைக் கண்ட சூரபன்மன் இந்திரனைப் போலவும் பூதங்களைப் போலவும் அக்கினியைப்போலவும் வாயுவைப் போலவும் சூரியனைப் போலவும் இன்னும் பலவாறாகவும் உருக்கொண்டு முருகக் கடவுளை வளைத்துக்கொண்டான். முருகக் கடவுள் பாணங்களை ஆயிரக்கணக்காக ஏவி அவன் கொண்ட உருவங்களையும் மாயங்களையும் அழித்து முடிவில் தம்முடைய விசுவ ரூபத்தைக் காட்டி அவனுக்குச் சிறிது நல்லுணர்வைத்தந்தார்.

நல்லுணர் வடைந்த சூரபன்மன், தான் கொண்டிருந்த அகங்கார மடங்கி, பரம்பொருளின் பெருமையும் திருவருள் திறனும் தெரிந்து, "இந்தப் பரமபதியின் தரிசினங் கிடைக்கப்பெற்ற நானே பாக்கியசாலி" என்றெண்ணி மகிழ்ந்தான். உடனே பகவான் முன்போல் மயில் மீது விளங்கினார். சூரனுக்கு அளித்திருந்த உணர்வை மாற்றினார். மாற்றவே அவன் முன்போல் அவர் மீது பகை கொண்டு முருகப்பெருமானை மயக்கி வெல்வது கருதி மிகப் பெரியதோர் அந்தகார வடிவங் கொண்டான். கொண்டதும் பகவான் தம்முடைய திருக்கரத்திலிலகிய வேற் படையை ஏவினார். அது ஆயிரங்கோடி சூரியர்களைப்போல் பிரகாசித்து அக்கினிச் சுவாலைகளை கான்று சென்று சூரன் கொண்ட இருள்வடிவை மாற்றியது. அவன் உடனே சமுத்திரமத்தியிற் சென்று, அண்டகூடமளவும் உயர்ந்ததோர் மாமர வடிவமானான். அந்தப் பெரிய மரத்தில் வேலாயுதம் பாய்ந்து அதனைச் சங்கரித்தது. சங்கரித்தும் சூரன் இறக்கவில்லை. அவன் உடனே பழைய உருவங் கொண்டு முருகப்பெருமானை எதிர்த்தான். வேலாயுதம் அவன் மார்பைப் பிளந்து இருகூறுக்கி அவனைக் கடலிலே தள்ளியது. இரு கூறுன சூரன் உடனே கோழியும் மயிலுமாய் உருக்கொண்டு போருக்கு வந்தான். முருகப்பெருமான் அவனுக்கு ஞானத்தை யளித்து, கோழியைக் கொடியாகக் கொண்டார். இந்திரனாகிய மயிலின்மீதிருந்திறங்கிச், சூரனாகிய மயிலின் மீதேறிக் கொண்டு, "நீ எனக்கு வாகனமாக இரு" என்று கூறி அதனைத் தனக்கு வாகனமாக்கிக் கொண்டார்.

தீனதயாபர மூர்த்தியாகிய முருகப் பெருமான், இணையீடற்ற வர பல மடைந்து மகா பராக்ரமசாலி யாக விளங்கிய சூரபன்மனை இவ்வாறு ஆட்கொண்ட தும் தேவர்களும் ஏனையரும் துன்பம் நீங்கி, இறைவனை வணங்கிப் பெருமகிழ்ச்சியுடன் தத்தம் உலகம் சென்றனர். முருகப் பெருமானும் தம்முடைய பரி சனங்களோடும் சேனைகளோடும் அந்த மகேந்திரபுரி யிலிருந்து புறப்பட்டுத் திருச்செந்தூரை அடைந்து உலகங்களுக்கு அருள்புரியும் கருணையோடு திருக் கோவிலில் அமர்ந்தருளினார்.

சுபம்.